பகுதி - க.



# நமது பலசாக்குக்கடை.



அஞ்சா நெஞ்சன் எழுதியது.



காரைக்குடி
மு. பழ. பழனியப்ப செட்டியாரால்
வெளியிடப்பட்டது.



0-8-0.

# முகவுரை



மனிதன் பிறருக்கு உபகாரம் புரியவே உலகத்திற் பிறந்திருக்கிறான். ஆனால் அவன் உலகத்திற்கு - மதத்திற்கு - தேசத்திற்கு - பாஷைக்கு உபகாரம் செய்ய முயல்வதற்கு முன்னால் தன் ஜாதியாருக்கு உபகாரஞ் செய்ய வேண்டிய தவசியம். சமூகத்திற் குழைப்பதென்றால் மிகுந்த பொறுமையும் தைரியமும் ஆற்றலும் சாதுர்யமும் அன்பும் வேண்டும். அவைகளில் யான் குறைவுபட்டிருந்தால் அன்பர்கள் பொறுத்துக்கொண்டு எனக்குப் புத்திமதி கூறித் திருத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நாட்டுக் கோட்டையாராகிய நமது சமூகத்தினரிடத்துள்ள குறைபாடுகளில் குறிப்பான சிலவற்றையே இதில் தெரிவித்துள்ளேன். பல அன்பர்கள், சமூகசம்பந்தமான பலவற்றையும் பஹிரங்கமாகக் கூறக்கூடாதென்று மிகமிகச் சொல்லுகிறபடியால் அநேகம் சரக்குகள் இதிற் காட்டப்படவில்லை. ஆனால் ஒரு விஷயம். நம்மிடமுள்ள குற்றங் குறைகளைவிட மற்றெல்லா ஜாதியாரிடத்தும் அதிகக் குற்றங் குறைகளிருக்கின்றன. ஆகவே நம்முடைய குறைகளை யெடுத்துப் பேசித் திருத்திக் கொள்வதை யிகழ்ந்து பேச உலகத்திலே ஆள்கிடையாது. "என்போல்வார் என்னை யிகழ்வரோ" என்றபடி குற்றமுடையார் ஏதாவது பேசினால் நான் அவர்களை விட்டுவிடுவேனா? இதனை

யுணராமல் நமது நண்பர்கள் மூடிவைக்கவேண்டுமென்கிறார்கள். இப்பொழுது காட்டி மறைத்தும் பலவற்றை மூடிவைத்தும் இப்புத்தகத்தை வெளியிட்டுள்ளேன். இதனைப்படித்துப் பார்க்கும் எனது சகோதரர்கள் கொஞ்சமாவது அநுட்டானத்தில் கொண்டுவர வேண்டும். இன்னும் ஏராளமான சாக்குக் கையிருப்பி லிருந்தாலும் கொஞ்சச் சாக்குகளைத் தான் வெளியே விட்டிருக்கிறேன். மற்றவை அடுத்த ஏற்றமதியில்!

துன்மதி௵ }
மாசிமீ" கூ௳ }

அஞ்சா நெஞ்சன்.



## மகுட அட்டவணை.

---

### கந்தாலங்காரம்.

நாளென்செயும்! வினைதானென்செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற் றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே.

### அப்பர்சுவாமிகள் தேவாரம்.

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."

### பொய்கையாழ்வார் திருவாய்மொழி.

ஏற்றான் புள்ளூர்ந்தான் எயிலெரித்தான் மார்பிடந்தான்
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீள்முடியான்
கங்கையான் நீள் கழலான் காப்பு.

# நமது பலசரக்குக்கடை



## சண்டப்பிரசண்ட புராணிகன்

ஒரு ஊரிலே ஒரு வித்வான் இருந்தார். சமஸ்கிருதத்திலே மகாவல்லவரென்று பேர். ஜனங்கள் யாவரும் தமிழர்கள். அவர் பேசுவதில் விஷயமில்லாவிட்டாலும், அதிக வேகமாயிருக்கும். அதை அவ்வூரிலுள்ள பெண்களும், பெண்குணமுள்ள புருஷர்களும் புண்ணியமான சொற்கள் பொருள் தெரியாவிட்டாலும் காதில் விழுதல் நலமென்று கருதி வந்து அரைத்தூக்கமாக இருப்பார்கள். இப்படி அதிக நாள் சென்றுவிட்டபடியால் உள்ளூர்ப் புராணிகரென்று ஒரு வகையான அபிமானம் அந்த ஊர் ஜனங்கட்கு உண்டாகிவிட்டது. ஒரு தினத்தில் நன்ருகக் கற்றுத்தெளிந்த வித்வாெனருவர் வந்து சேர்ந்தார். புராணப் பிரசங்கம் வழக்கம் போலத் தொடங்கப் பெற்றது. தப்புந் தவறுமாக சுலோகங்களை வாரியிறைத்துக்கொண்டு நிறுத்துமிடங்களைக் கூடக் கவனியாது, வாசாமகோசரமாகப் பிரசங்கம் செய்யப் புறப்பட்டுவிட்டார். கொழும்புக்குப்போகிற போட்மெயில் கூடத் தண்டவாளத்தையாவது துணைப் பற்றிப் போகிறது. இந்த ரயிலுக்கு அதுவுமில்லை. விஷயமோ ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை. ஆனல், வேகம் படுவேகம்! பார்த்தார் வந்த புதுப்புலவர். தப்பிதத்தைப் பார்த்துக்கொண்டு மௌனமாயிருத்தல் பாப

மென்று கருதி மிகப் பணிவாக ஒரு சுலோகத்தின் பொருளை நிதானமாக விளக்கினர். பழைய புராணிகரோ இதை ஒப்புக்கொண்டால் ஜனங்கள் தமக்கு எல்லாம் தெரியவில்லையென்று நினைத்துவிடுவார்களென்று கருதி, ஒன்றுக்கொன்று இடித்துச் சேர்ந்தாலும் ஒன்று கூட்ட முடியாத பல சுலோகங்களை ஒரே மூச்சில் சொல்லி வியாக்கியானமும் செய்து முடித்துவிட்டு, என்ன சாஸ் திரியள்! எப்படி? என்று கேட்டார். அங்கிருந்த ஜனங்களும் "எப்படி இருந்தாலும் நம்முடைய சாஸ் திரியாருக் கிணையாகுமா? எவ்வளவு வேகமாகப் பேசு கிறர்! எத்தனை சுலோகம்! வந்தவருக்குப் படிப்புப் போராது!" என்று சொல்லி விட்டார்கள்.

புதுப்புலவர் பார்த்தார். ஆஹா! உலகம் இப்படி யிருக்கிறதே! இப்படி ஒன்றுந்தெரியாத ஒருவர் உண்மை யும் பக்தியுமுள்ள ஜனங்களை ஏமாற்றிப் பிடுங்கித் தின்று வருகிறரே யென்று கவலைப்பட்டு யோஜித்துக் கொண்டிருந்தார். பிறகு தினந்தோறும் வந்து மிகுந்த பயபக்தியோடு புராண சிரவணஞ் செய்து வந்தார். பிற கொருநாள் புதுப்புலவர் புராணிகரைப் பார்த்து, சுவாமி! நான் ஊருக்குப் போகிறேன்; தேவரீரது கருணை என்னி டம் எப்போது மிருக்கவேண்டுமென்று சொன்னர். புராணிகரோ அப்படியேயிருக்கும்; இனிமேற் பெரி யோர்களிடத்தில் விரோதகமாக நடக்கவேண்டாம்; அபசாரம் வரும்; என்று சொன்னர். அப்படியே ஆகட்டுமென்று சொல்லி, சுவாமீ! தேவரீரது ஞாபக மெப்போது மிருக்கல் வேண்டும், அதற்குத் தங்கள் சிரசிலுள்ள ஒரு ரோமத்தை யெடுத்துப்போய்த் தினங்

தோறும் பூஜித்தால் சகல பாபங்களும் நசித்து நான் கிருதார்த்தனுவேன்; ஆதலால் அதிலொன்று எடுத்துக் கொள்ளத் திருவுளம் பற்றவேண்டு மென்ருர். புராணிகர் யோசித்தார். இவன் சனியனைப்போல வந்திருக் கிருன். இதோடாவது தொலையட்டு மென்று நினைத்து அப்படியே ஆகட்டு மென்ருர். புதிய புலவர் உச்சியி லுள்ள ஒரு ரோமத்தை வெடுக்கென்று இழுத்துக் கண்ணிலொற்றிச் சிரமீதணிந்து புறப்பட்டு விட்டார்.

அங்கிருந்தவர்கள் நடந்ததைப்பார்த்தார்கள். பெரிய புண்ணியம் இவ்வளவு எளிதில் வந்தால் விடுவார்களா? அவ்வூர் வாசிகள் அவ்வளவு பைத்தியக்காரர்களல்லர்! ஒவ்வொருவராக எழுந்தார்கள். ஒரு நமஸ்காரம்! ஒரு தலைமயிர்! ஆள் அதிகமாக வந்திருந்த படியால் நான் முந்தி! நான் முந்தி! என்று பிடித்திழுக்கவே புராணிகர் பாடு அந்தரமாய்விட்டது. புத்தியும் வந்தது. இந்த நாட்டில் அப்படிப் புராணிகர்கள் இல்லாமலா போய் விட்டார்கள்!



# பக்தி யாரிடத்தில்?

நல்ல சங்கதியெல்லாம் கெட்ட சங்கதியாகப் போய் விட்டது. காலம் கெட்டுப் போய்விட்டது. நியாயத் துக்கு மதிப்பில்லை. உள்ளதைச் சொல்லுகிறவனுக்கு "அயோக்கியன்" "போக்கிரி" "நாமில்லாதவன்" "மூாட்டுப் பயல்" என்ற பட்டங்களைக்கட்ட சில பேர் வழிகள் முன்வருகிறார்கள். யார் எதைச் சொன்னாலும் நான் என்ன செய்வேன். எழுதுகிறபோது அநியாயம் செய்வோரைக் கொஞ்சம் கண்டிக்கவேண்டியது அவசி யந்தானே? நாமெல்லாரும் கூடிப் பெரிய பெரிய கோவில் கட்டுகிறோம்! அது நல்ல தருமம். பதிபுண்ணியம். ஆனால் அது நல்ல வழியில் நடைபெற வேண்டுமல்லவா! அது ஒருபுற மிருக்கட்டும். அங்கே வருகிறார்களே ஜனங்கள் அவர்கள் நல்ல வழியிலே போவதற்கு-கோவி லில் நியாய முறைப்படி நடப்பதற்கு அவர்கட்குக் கற் றுக் கொடுக்க வேண்டும். அதற்கொரு பள்ளிக்கூடம் கிடையாது. அதுவுமிருக்கட்டும், இப்போது ஒரு சங்கதியைச் சொல்லுகிறேன். மற்றவையெல்லாம் பின் னாலே பார்க்கலாம். கோவில்களிலே திருவிழா நடத்து கிறோமே அது எதற்காகவென்று எனது நண்பர் சாமி யாரைக் கேட்டேன். எனது நண்பர் தாடிச்சாமி யாரோ உலக அநுபவத்தில் மகாமேதாவி. ஜனங்களை யேமாற்றுவதிலும் மகாநிபுணர். அவர் சொன்னார்:— "ஒரு பெருத்த கொண்டாட்டம் வைத்தால் ஜனங் களுக்கு ஒரு உணர்ச்சி உண்டாகும். பலர் ஒன்று கூடு வார்கள். அந்த சமயத்தில் தெய்வபக்தி உண்டாக்கு

வதற்காகத்தான் உற்சவம் நடத்துகிறது. இப்போது கூட, சில சபைகள் தூங்கி வழியும்போது ஜனங்கட்கு அபிமான மில்லாதிருக்கும்போது - சாப்பாடு பலகாரம் போட்டாவது ஒரு வருஷக்கொண்டாட்டம் வைத்தால் ஜனங்கள் அபிமானம் வைக்க வழி யுண்டாவதை நாம் நேரே பார்க்கிறோமல்லவா? ஜனங்களுக்கும் அதிகாரி களுக்கும் சச்சரவிருந்தால் ராஜாவாவது இளவரசராவது வந்து பெருங்கிளர்ச்சியை யுண்டாக்கி அப்படி சரிப் படுத்த வழியிருக்கிறதை நாமறியவில்லையா? ஒரு பெருங் கூட்டங்கூட்டிக் கொஞ்சம் முயற்சி செய்தால் பல னுண் டாகிவிடுவ தியல்பு. சுலபமுமாகும். தெய்வ பக்தியை யூட்டுவதற்குத்தான் இந்த உற்சவங்கள் நடக்கின்றன" என்று சொன்னார். இதைக் கேட்கவே எனக்குச்சிரிப்பு வந்து விட்டது. என்னவோ முந்தின கால முறை காதுக்கு நன்றாகத்தா னிருக்கிறது. செய்கைமட்டும் சுத்தக் கோளாறாக இருக்கிறது. நம்மவர்கள் கோவில் களில் உற்சவங்கள் செய்கிறார்கள், பார்ப்பவர் மயங்கும் படி இருக்கிறது. ஆயிரமாயிரமாக ஜனங்கள் கூடுகிறார் கள். அந்த ஜனங்களுடைய மனதில் நல்ல எண்ணமும் தெய்வ பக்தியும் உண்டாக வேண்டுமே! அதற்கு தேவார பாராயணம் கதாப் பிரசங்கங்கள் பஜனை கோஷ்டிகள் நாகசுரம் முதலியன பொருத்த மானவைகள் தாம். ஆனால் மற்றொரு சங்கதியைச் சொல்லாமலிருக்க முடிய வில்லை. அதென்ன கச்சேரி தெரியுமா? மானங்கெட்ட கச்சேரி. சதுர்க்கச்சேரி. இதற்குப் பலே வேட்டை. இது ஆடித்தான் சாமி தூக்கவேண்டுமாம். சுத்த விய பிசாரி. அவளைக் கொண்டுவந்து ஆணும் பெண்ணும்

சுவாமி தரிசனத்திற்கு வந்திருக்கும்போது விளையாட விட்டு வேடிக்கை பார்ப்பதெதற்கு! இந்த ஆட்டத்தில் இளம்பிள்ளைகளுடைய மனதைக் கவரச்செய்தால் தான் சுவாமி கடாக்ஷம் கிடைக்குமோ? வியபிசாரியின் முகத்திலே விழித்தாலும் விடியாது. அப்படி பொருத்தியைக் கொண்டுவந்து ஆடவிட்டு அவளைப் பின்பற்றி அநேகம் வாலிபர் கட்டுக்கடங்காமல் அலைந்து திரிவதை நான் பார்த்திருக்கிறேன். கோவிலுக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்ய வேண்டியது அவசியம். ஆனல் அங்கு தேவடியாளின் ஆட்டத்தைப் பார்க்க வேண்டியதும் அவசியமா என்பது என் புத்திக்கு எட்டவில்லை. ஆனல் இப்போது சுவாமி தரிசனம் செய்வதற்காக மானம் மரியாதையுள்ளவர்கள் சென்ருல் தேவடியாள் கூட்டம் வழியை மறித்து நிற்கிறது. சுவாமிக்கு முன்னல் ஒரே கூட்டமாகக் கூடிக்கொண்டு மோக்ஷவாயிலைத் தடுக்கிற அஞ்ஞான இருளைப்போலத் தடுத்து நிற்கிறது.

முந்தின காலத்திலே சில பக்தியுள்ள பெண்கள் உலகவின்பத்தில் ஆசையற்றவர்களாய் எல்லாம் வல்ல பரமசிவத்தையே கணவனுக மதித்து அதற்கடையாளமாகப் பொட்டுக் கட்டிக்கொண்டு கடவுளது பணியைச் செய்து வந்தனர். அதனல் தான் “தாசி” “தாசத்தொழில் புரிபவள்” என்ற பெயர் வழங்கி வந்தது. இப்போது அந்தக் கதை மாறிப்போய்விட்டது. பொட்டுக் கட்டுவதென்ருல் வியபிசாரத்திற்கென்று தீர்ந்து போய்விட்டது. வியபிசாரிக்குக் கோவிலிலென்ன வேலையென்று நான் கேட்கிறேன். அவர்கள் எழுந்தருளாவிட்டால் ஜனக்கூட்டம் வராதென்று ஒரு

பெரியவர் சொன்னார். தேவடியாளைப் பார்க்க வருகிற ஜனங்கள் எதற்காக? அவர்கள் வந்து என்ன செய்வார்கள். அடுத்தாற்போல் நிற்பவர்களது ஆபரணங்களைத் திருடித் தேவடியாளுக்குக் கொடுத்துக் கெட்டுப்போவார்கள். அவர்களா தேவடியாள் ஆட்டத்தைப் பார்ப்பதை விட்டுப் பக்தியானாகிவிடப் போகிறார்கள். தர்ம கர்த்தாக்கள் தேவடியாள் ஆட்டத்தில் மயங்காமல் இந்த வியபிசாரிகளைக் கோவில் பக்கம் வரவொட்டாமல் தொலைக்க வேண்டும். அப்போது தான் உண்மை பக்தியுண்டாகும். மற்ற ஆணும், பெண்ணும் கற்பொழுக்கத்தில் சிறந்து வாழமுடியும். என் வார்த்தையில் கோபங்கொள்ளுகிற எனது சகோதரர்கள் இந்தத் தேவடியாள் ஆட்டத்தை யடக்கிவிடுவார்களா? தேவடியாள் கோவிலில் ஆடவருவதால் தான் வாலிபர்கள் நாசமாகப் போகிறார்கள். தேவடியாள் வருகிற கோவில்களுக்குப் போவதில்லை யென்று உண்மையான பக்தியுடையவர்கள் ஒதுங்கி நிற்பார்களா? அப்படி நின்றுவிட்டால் தருமகர்த்தா தேவடியாளை வரவழைத்து ஆடவிட்டுச் சேர்க்கும் கூட்டம் எப்படியிருக்கும்?



## பயனென்ன?

பலே பேஷ். ஊர் ஊராகத் தீர்மானங்கள் பாஸாகிறது. அதிகச் செலவு, அனுவசியச் செலவு என்ற ஊரை நோக்கி ரயில் போய்க்கொண்டிருந்தது. இப்போது செட்டு, அவசியச் செலவு என்ற ஊர்களைநோக்கி ரயில் திரும்புகிறது. நாட்டுக் கோட்டையார் விழித்துக் கொண்டு விட்டார்கள். நம்மை ஏமாற்றுகிற ஆசாமிகளுக்குப் பணம் கொடுப்பதை நிறுத்தினல் தானே அவர்கட்குப் புத்திவரும்; பணத்தையும் வாங்கிக் கொண்டு ஏமாற்றிவிட்டோமென்று சொல்பவர்களிடத்தில் நாம் சரியாக வல்லவா நடந்துகொள்ள வேண்டும்! "நாட்டுக்கோட்டையார் மிக நல்லவர்கள். வம்புக்குப் போக மாட்டார்கள். கொஞ்சம் பொல்லாதவனைக் கண்டால் பயந்து விலகி விடுவார்கள். பணங்கொடுத்தாவது விலகிக்கொள்வார்கள்." இந்த சங்கதி மற்றவர்கட்கு நன்ருகத் தெரிந்து விட்டது. இதற்காக, அவர்கள் சமர்த்தர்கள் இல்லையா! ஒன்றுந் தெரியாதா! வயிற்றுச் சோற்றுக்கு மற்றவர்கள் லாட்டரி யடிக்கிறபோது லட்ச லட்சமாகச் சம்பாதிப்பவர் யார்? இது கிடக்கட்டும்.

ஊர் ஊராகத் தீர்மானங்கள் செய்திருக்கிருர்கள். அதிலே, கலியாண வீட்டிலே, சில காரியங்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன. அதிலே, பாகவதர் கச்சேரி ஒன்று. பாகவதர் கச்சேரி என்ருல் என்ன? பாவ - கான - தாளத்தில் சிறந்தவராகிப் பகவத் பக்தி மலிந்து ஜனங்களைக் காந்தம் போல் இழுத்து ஈச்வரனது திவ்ய பாதார விந்தத்தில் லயப்படுத்தி மோக்ஷ உலகத்தின் திருவாயிலைத்

திறந்து விடவேண்டும் : அவனே பாகவதன். ஓடும் பொன்னும் ஒன்றெனக் கருதி உண்மையாகத் தனது ஹிருதயத்தை எம்பெருமானுடைய திருவடிகளிலேயே இரவு பகல் செலுத்தி விட்டு ஜனங்களை வாழ்விக்க உழைப்பவனே பாகவதன். ஒரு துக்காராம் ; ஒரு கபீர்தாஸ் ; எப்படியிருந்தனர் ? தற்காலத்தில் கெஞ்சி ராக்கட்டை கையில் தூக்கி விட்டால் பாகவதன். சால ரெடுத்துத் தட்டத் தெரிந்தால் பாகவதன். அவன் பேச்சில் பக்தி இருக்கு மிடந்தெரியாது. கொஞ்ச நாளைக்கு முந்தி ஒரு கறுப்புப் பாகவதர் கதை பண்ணி ஞர். "வந்தான் சித்திரசேனன்" என்று ஒரு கத்துக் கத்தினர். தூங்கின பிள்ளை யெல்லாம் விழித்து அலற ஆரம்பித்தது. பாகவதருடைய விழியையும் தொனியை யும் கோரரூபத்தையும் பார்த்து, வந்திருந்தவர்களெல் லாரும் பயந்து போய் விட்டனர். இதுதானு பக்தியைப் புகட்டுகிற மார்க்கம் ? மற்றொரு சிவப்புப் பாகவதர் கதை பண்ண வந்தார். விசேஷக்காரர் நந்தனர் சரித்திர கால க்ஷேபம் செய்யவேண்டு மென்று சொன்னர்கள். பாக வத சுவாமிகளுக்கு சன்மார்க்கம் வராது. ஆனாலும், தெரியாதென்றால் கேவலமல்லவா ? சரியென்று ஒப்புக் கொண்டார். ஜனங்கூடி விட்டது. சாலரடிக்கிறார். கிஞ்சின் ஆட்டம் நயமாக ஆடுகிறார். புன்னகைக்குக் குறைவில்லை. நந்தனர்சரித்திரம் வரமாட்டேனென் கிறது. நந்தனர் சிறந்த சிவபக்தர் ; அவர் பெயரைச் சொல்வதற்கே தவஞ் செய்ய வேண்டும் ; அந்தப் பரம பக்தருடைய சரித்திராம்ருதத்தை ஜனங்களெல்லாம் பருகி உய்யும் பொருட்டு வீட்டுக்காரர் கதை பண்ணச்

சொன்னார். மத்தளக்காரர் முழுவாங்கு வாங்குகிறார். பின்பாட்டும் தயார். ஜனங்கள் ஆவலாக இருக்கிறார் கள். மணி இரவு ௧௦ - ஆகிவிட்டது. பாகவதர் ஆடு கிறாரே தவிர வார்த்தையைக் காணவில்லை. ஆடு திருடின கள்ளன் மாதிரி விழித்துவிட்டு ஒருவகையாக ஆரம்பித்தார். "உலகநிலை சரியாகவில்லை; இரண்டு நண்பர்கள் அ - மணிக்கு வீதியில் சந்தித்தார்கள்; ஒருவன் நந்தன் சரித்திரம் கேட்கப் போகிறேனென்றான். மற்றவன் பேஷான டிராமா நடக்கிறது, அங்கே போகிறேனென்றான்; இருவரும் தர்க்கஞ்செய்து முடிவில் ஒருவன் கதைக்கும் மற்றவன் டிராமாவுக்கும் போனார்கள்; கதைக்குப் போனவனைப் பிறகு பார்ப்போம். முன்னாலே ட்ராமாவுக்குப் போனவனைப் பார்ப்போம்; அங்கே தாராசசாங்கம் நடைபெற்றது" என்று முகவுரை சொல்லி, தாரா சசாங்கம் வெகு விமரிசையாக எல்லா ஆக்டும் தாமே செய்து நடத்தினர். இரவு ௧௨-மணிக்கு மேல், போனவர்கள் போக பாக்கியிருந்த ரு-சு பேருக்கு, "ஒரு நாளும் வாராத பக்தன்-நந்தன்" என்று ௩௦-தரம் சொல்லி முடித்து விட்டாராம். இதற்கு ரூபா நானூறு, ஆணும் பெண்ணும் கூடி இருக்கிற கலியாண வீட்டில் இந்த பாகவதருக்கு என்ன வேலை? இந்தக் கதையினால் ஒழுக்கத்தவறு தான் ஏற்படும். இந்த ஆசாமிகள் பணத்தை வாங்கிக்கொண்டு "நாட்டுக்கோட்டையாருக்கு அவ்வளவு போதாது" என்று பேசுவதைப்பலர் பார்த்திருக்கலாம். டவுன்களில் மூட்டை தூக்கவும் உதவாத இவர்கள், "௬௦௦ தந்தால் தான் வருவேன்; தைமீ கிராக்கி அதிகம்" என்று தந்தியடிப்பதையும் பார்க்

கிறோம். இந்த ஆசாமிகளையழைப்ப தில்லையென்ற தீர் மானம் பலே பேஷ்

இனி நம் நாட்டுக்கு இரண்டொரு பாகவதர் சரி யானவர்களாக வருகிறார்கள். அவர்கள் ஸம்ஸ்கிருதத் தில்—தமிழில் அறிவுள்ளவர்கள். ஜனங்களை இழுக்கக் கூடியவர்கள். ஆனால் அவர்களும் பண சங்கதியில் ஒரு மாதிரிதான். டிமாண்டு அதிகப்பட்டால் விடுவார்களா? அவர்களும் சமயத்தில் ரெண்டு தெம்மாங்கு பாடி விடு கிறார்கள். டகாரம் சில சமயத்தில் மலிந்து விடுகிறது. 'ஒருத்திக் கொருமகன்........." என்று பாடி விடுகிறார் களல்லவா? எப்படியிருந்தாலும் கலியாணத்தில் இந்த சங்கதி வேண்டாம். சாதாரண காலத்தில் வைத்துக் கொண்டால் இவ்வளவு பிரிய முண்டாகாது.

இனி, செட்டி நாட்டுக்குச்சரியான பாகவதர் வர வேண்டும். மற்றவர்கள் செட்டி நாட்டை யெதிர்பார்க்க வேண்டாம். நாட்டுக்கோட்டையார் விழித்துக்கொண் டார்க ளென்பதைத் தெரிவித்து விளக்கெண்ணெய்ப் பாகவதர்கட்கு விடைகொடுக்கிறேன்.



## தாடிச் சாமியார்

தாடியும் மீசையும் தலையில் சடையும் தாராளமாக வளர்த்து வைத்திருக்கிற சாமியாரொருவர் எனக்கு நண்பராயிருக்கிறார். அவர் எல்லா வழியிலும் சீரழிந்து வருகிறவரானதால், "ஏனையா இப்படி? ஏதாவதொரு தொழில் செய்யக்கூடாதா" என்று கேட்டேன். அதற்குச் சாமியார்:—"உமக்குத் தெரியாது நம்முடைய சூட்சுமம்! நாங்கள் தலைமுறை தலைமுறையாக சாமியார் குடும்பம்; ஜனங்களோ பேதைகள். சாமியாரென்றால் போதும், சாதம் போட்டுவிடுகிறார்கள். தாடியும் மீசையும் தலையிலுள்ள சடையும் எனக்கு வைத்தியம் சோதிடம் மாந்த்ரீகம் முதலிய யாவும் தெரியுமென்று சொல்லி விடுகின்றன. எனக்குத் தெரியுமா தெரியாதா என்று சோதிக்கிற பேர்வழிகளின் பேச்சுக்கு இன்னும் மதிப்பேற்படவில்லை. அடித்த மட்டும் லாபம். பாம்பரைத் தாடியைத் தவிர நம்மிடம் வேறு கைச்சரக்கு ஒன்றுமில்லையென்பது எனக்கு நன்றாகத் தெரியும். எல்லாரும் ஏமாந்த சோணகிரியாயிருக்கும் போது எனக்கென்ன யோசனை! ஏன் வேறு தொழில் பார்க்கச்சொல்கிறீர்?" என்றார். "என்ன ஐயா அநியாயமாயிருக்கிறது? யோக்கிதையில்லாமல் சாமியாரென்று சொல்லலாமா? இதனால் தானே சாமியார்களென்றவுடன் கொஞ்சம் யோசிக்கவேண்டியிருக்கிறது! சாதாரணமான ஜனங்களை ஏமாற்றலாமா" என்றேன். அதற்கு சாமியார்:— "ஆம் ஐயா! யோக்கியதையில்லை. பரம்பரையிருக்கிறது. சாமியார்பிள்ளை சாமியார். சாமியாருக் குரியலட்சண

மிருந்தாலென்ன? இல்லாவிட்டாலென்ன? சாஸ்திரி பிள்ளை சாஸ்திரி. சாஸ்திரம் படித்தாலென்ன? படியா விட்டாலென்ன? பெரிய மனிதன் பிள்ளை பெரிய மனிதன். பெரியமனிதத் தன்மை யிருந்தாலென்ன? இல்லா விட்டாலென்ன?" என்ருர். இவரை மட்டும் குறை சொல்லி ஆவதென்ன?



## சாமியார் ஏன் சிரித்தார்?

மோக்ஷத்திற்குப் போவதற்குப் பலவழி யிருப்பது போல உலகத்தில் சுகமாக வாழ்வதற்கும் பல வழிகள் உண்டு. இரண்டுக்குஞ் சேர்த்து ஒரே வழி யிருக்கின்றதென்று நூல்கள் உரைக்கின்றன. ஒன்று காட்டுக்குப் போய்க் கனி கிழங்குகளைத் தின்று தவஞ் செய்வது. மற்றொன்று கலியாணஞ்செய்து நல்லசோறு சாப்பிட்டு கேளீ விலாசத்தில் நோய் முதலியன வின்றி சுகமாகக் காலங்கழிப்பது. அநேகமாக ஜனங்கள் எதை விரும்புவார்கள்? வீட்டிலிருப்பதைத் தானே விரும்புவார்கள்! சுகம்பெற விரும்புகிற தற்கால ஜனங்களா காட்டில் கல்லிலும் முள்ளிலுமிருந்து கடுந்தவம் புரிவார்கள்? ஆனால் மோக்ஷத்திலும் ஆசையில்லாமற் போகவில்லை. இதைப்பற்றி நமது தாடிச் சாமியாரைக் கேட்டேன். தாடிச் சாமியார் அநுபவத்தில் சுத்த மோசக்காரராயிருந்தாலும் நல்லாய்ப்படித்தவர். உலக அநுபவத்தில் கைதேர்ந்தவர். "காட்டுக்குப் போய் வாழ்வது துன்பம். நாட்டிலிருந்து வாழ்வது சுலபம். மோக்ஷம் இரண்டிலு முண்டு. ஆனால் திருப்தியோடிருக்க வேண்டும்." என்று சொன்னார். "அது கிடக்கட்டுமையா. சன்யாசிகளும் இல்லறத்தாரும் விரதமிருக்க வேண்டுமென்று சொல்கிறார்களே. விரதம் பிடிப்பதால் பயனுண்டா? இல்லையா? படிக்க வேண்டியது அவசியமா? இல்லையா? இம்மைக்கும் மறுமைக்கும் அவ் விரதம் பயன்தருமா? தாராதா? சொல்லும்" என்று கேட்டேன். அவர் சிரித்துக்கொண்டு "வேண்டியது தான். பயனு

முண்டு” என்று சாவதானமாகச் சொன்னார். அவர் சிரித்ததற்கு அர்த்தம் எனக்கும் தெரியும். படிக்கிற உங்களுக்கும் தெரியும். ஆனால் ஒன்று. உலகத்திலே எனது நண்பர் சிலர் இருக்கிறார்கள். யாராவது எதை யாவது சொன்னால் மெள்ளச் சிரித்துக் கொள்கிறது. “ சரிதான் நாம் சொன்னது. அவர்கள் அளவாகத்தான் பேசுவார்கள் போலிருக்கிறது ” என்று தாக்கல் சொன்ன வர் நினைத்து மகிழ்கிறது வழக்கம். ஆனால் கேட்டுக் கொண்டிருந்தவர் சுத்த சாம்பிராணியாக விருப்பார். சங் கதி விளங்காது. என்றாலும் விளங்கவில்லை யென்று காட்டிக் கொண்டால் கெளரவமில்லை யல்லவா ? தெரிந்து விட்டதாகப் பாவனை செய்கிறது. இது சாதாரணமாக அசடுகளின் சொபாவம். இந்தக்கதை யெல்லாம் எனக் குத் தெரியும். இருந்தாலும் பாவம் போகட்டும் என்று சும்மா விருந்துவிடுவேன். சில சமயங்களில் தாக்கல் சொல்பவர் சந்தேகப்பட்டு “ என்ன நான் சொல்வதற் குப் பதில் சொல்லாமலிருக்கிறீர்களே ! ” என்று கேட் டால் “ ஓகோ நான் வேறே ஞாபகமாயிருந்து விட்டேன்” என்று நாசூக்காகப் பதில் கூறி சமாளித்து விடுவார்கள். இதெல்லாம் எனக்குப் பிடிக்கிறதில்லை. ஏன் பொய்யும் புரட்டும் பாசாங்கும் செய்யவேண்டும் ? தெரிந்தால் தெரி யும் என்று சொல்லவேண்டும். தெரியாவிட்டால் தைரிய மாகத் தெரியாது என்று சொல்ல வேண்டியது தானே ! இதற்குக் கூடவா பயம் ! உலகத்தில் எல்லாருக்கும் அநேக சங்கதி தெரியாது. அப்படி நமக்கும் சில சங் கதி தெரியாது. இதிலென்ன வெட்கம் ! பொய் சொல் லத் தெரியாவிட்டால் வெட்கமா ? களவாடத் தெரியாம

லிருப்பது வெட்கமா? விபசாரஞ் செய்யத் தெரியா திருப்பது வெட்கமா? இல்லை. தெரியாது என்று சொல்லுவது தான் பெருமை! ஆகையால் தெரியாத தைத் தெரியாதென்று தைரியமாகச் சொல்லிவிட வேண் டும். ஆகையால் சாமியார் சிரித்ததற்கு என்ன அர்த்தம்? உலகத்திலே இன்னுஞ் சில கைகார ஆசாமிகள் உண்டு, சில அறிவாளிகள் சூட்சுமமாகப் பேசுகிறபோது அதற் கென்ன அர்த்தம் என்று யாராவது தன்னைக் கேட்டு விட் டால் என்ன சொல்கிறதென்று பயந்து எதிரே யிருப்ப வரைப் பார்த்து "அவர் அப்படி சூட்சுமமாகப் பேசின ரல்லவா? அதன் பொருளென்ன தெரியுமா? உலகத்தி லுள்ள சாதாரண ஜனங்கட்கு ரசமான இடங்கள் தெரி கிறதில்லை. இந்தக் குறிப்புக்கூடத் தெரியாவிட்டால் அவன் மனிதனில்லை. பிரேதந்தான்" என்று ஒரு அடி யடிக்கிறார்கள். இதைக் கேட்டுக்கொண்டு எதிரிலிருக் கிற மண்டுக்கள் நமக்கு விளங்கவில்லை யென்று காட்டிக் கொண்டால் நாம் முட்டாளாகி விடுவோம் என்று கருதி "ஆமா. ஆமா. இது தெரியாமல் மனிதன் இருந்தா லென்ன போனலென்ன" என்று உளறிக்கொண்டு போகி ருர்கள். இப்படிப் பல வழிகளில் வெறும் பேர்வழிகள் காலக்ஷேபஞ் செய்கிருர்கள். தனக்குத் தெரியாத விஷ யங்களைத் தெரிந்து கொள்வதுதான் கௌரவமாகுமே யன்றித் தெரியாத விஷயங்களைத் தெரிந்ததாகப் பாவித் துக் கொள்வதில் கௌரவம் அணுவளவுமில்லை. ஆனல் அப்படி நடிப்பதால் அவமானமே யுண்டாகுமென்பதைச் சில சாதுக்கள் அறிகிருர்களில்லை. இந்த சங்கதி யெல் லாம் எனக்குப் பிடிக்காது. நான் கடையை உடைத்து

விடுவேன். எதற்காக சாமியார் சிரித்தாரென்பதை வெளி யாக்கிவிட வேண்டுமல்லவா? ஏன் அவர் சிரித்தார்? "விரதங்கள் பிடிப்பதால் இகபர சாதனங்களைப் பெற லாம். சந்தேகமில்லை. இப்போது அவைகள் ஒழுங் காக அநுட்டிக்கப்படவில்லை. இப்போதநுட்டிக்கப்படும் முறையில் அநுட்டித்தால் பாவந்தான் வரும். இப்போது விரதம் பிடிக்கிறமுறை படித்தவர்களுக்குச் சிரிப்புக்கிட மாகி விட்டது. இதுதான் அவர் சிரிப்புக்குப் பொழிப் புரை. விருத்தியுரை பிறகு!



# கார்த்திகை விரதம்

மனிதனாகப் பிறந்தவன் வீணாக ஒன்றையும் செய்யக்கூடாது. விரதம் பிடிக்கிறோமே! அது எதற்காக? மோக்ஷத்துக்குப் போகச் சில விரதங்கள்! சுகமாயிருக்கச் சில விரதங்கள்! இம்மைக்குச் சில விரதம்! மறுமைக்குச் சில விரதம்! இது தான் விரதம் பிடிப்பதற்கு முக்கிய காரணம். பெரியோர்களால் விரதம் பிடிக்கிற மாதிரி நூல்களில் பேசப்பட்டிருக்கின்றன. முழுப்பட்டினி யிருப்பது சில விரதம். இரவில் விளக்கு வைத்த பின் உண்பது ஒரு விரதம். பகலில் மூக்குப்பிடிக்க ஒரு வேளைமட்டும் பிடிப்பது ஒருவகை விரதம். இவையெல்லாம் நம்முடைய யோக்கியதை தெரிந்து செய்யப்பட்டிருக்கிற சாதகம். நியாயமாகப்பார்த்தால் முழுப்பட்டினி யிருப்பதுதான் சரியான விரதம். அப்படிச் சொன்னால் எத்தனை பேர் அநுட்டிக்கப் போகிறார்கள்? கடுமையாக விதித்துவிட்டால் ஒருவரும் அநுட்டிக்கமாட்டார்கள் என்று கருதியே படிப்படியாகச் சில முறைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. என்றாலும் இப்போது பிடிக்கிற விரதமோ சொல்ல வேண்டியதில்லை. கார்த்திகை விரதமா? போடு காலையில் பலகாரம்! ஷோக்காய இட்டலி! அதற்கேற்ற சாம்பார்! உருளைக்கிழங்கு தக்காளி! உறைப்பான சட்னி! பீர் சாராயத்தைவிட போதையதிகமுள்ள பில்டர் காபி! இவைகளைச் சேர்த்து ஒரு அடி அடித்தால் பூர்ணாதி லேகியம் சாப்பிட்டாலன்றி லேசிலே செமியாது! இது காலைக்கார்த்திகை! மத்தியானக் கார்த்திகையோ சொல்ல வேண்டியதில்லை. எப்போதும் ஒரு

குழம்பு. இரண்டுகறி. ஆனல் இன்று ஏழெட்டுக்கறி! ரசம் சாம்பார்! பாயசம் அப்பளம் இத்யாதி! தினம் சாப்பிடுவதைவிட இருமடங்கு சாப்பாடு! இதுதான் பகற் கார்த்திகை! மாலைக்கார்த்திகை காபிகிளப்பில். லட்டு ஜிலேபி பூவந்தி அல்வா. காரசாரமான பல பலகாரங்கள். காபி. இத்யாதி சாமக்ரியைகள்! பிறகு சுவாமி தரிசன விமரிசை. உள்ளூரில் சுப்பிரமணிய சாமி யிருக்கிற சங்கதியே அநேகருக்குத் தெரியாது. ஆனல் ஜோரான வண்டியில் மாடு போட்டு வண்டிக் காரனை உள்ளே வைத்து கிறுக்கித் தலைக்கட்டுக்கட்டி முதலாளி மூக்கணையிலிருந்து கையில் கொண்டைக்கம்பு வேலாயுதந் தாங்கிவிட்டால் ஆஹா! ரெண்டு ஊனு ஊணி அட்டத்திலே ஒதுக்கி ஒரு கியாலப்! ஒரு குத் தவைப்பில் முன் வண்டியாக வந்து நின்றதோ அதுதான் இந்திரபதவி! முடிந்தது பிறவிப்பயன்! மாட்டைக் குட லறுந்துபோக நுரைத்தள்ளிப் பெருமூச்சுவாங்க விரட் டிக் குன்றுக்குடியில் நிறுத்தி யிறங்கும்போது ஆஹா! என்ன திருக்கோலம்! முற்றத்துறந்த சங்யாசிகளுக்குங் கிடைக்காத தோற்றம். உடனே தலை முழுகிபாகவேண் டும். வேட்டி மாற்றிவிடவேண்டும். அவ்வளவு தூசி. இதற்கிடையில் மாட்டுக்கு சைத்யோபசாரம் செய்து ஆகவேண்டியதை முடித்துக்கொண்டு பலகாரத்தை பொருவாரு வாரிவிட்டுப் புறப்பட்டு வீடு வந்து சேர வேண்டியது. வரும்வழியில் ஏதாவது சிகப்புக் குல் லாய்கள் சந்தித்தால் அதற்குக் கொஞ்சம் அடித்தழுக வேண்டியது. இவ்வளவோடு கார்த்திகை விரதம் முடி வடைகிறது. வேறு சிலர் நியாயமாக அநுட்டிக்கிறா் கள். நியாயமாக நடக்கிறவர்களிடந்தான் எனக்கு வேலை யில்லையே!

## பிள்ளேயான் தம்பியா?

பிள்ளேயார் நோன்பு. இது ஒரு உயர்ந்த விரதம். இது ஒரு சைவ விரதம். விநாயகருக்குரியது. இதை நம்மவரும் யாழ்ப்பாணம் சைவரும் வேறு சிலரும் முக்கியமாகக் கொண்டிருக்கிருர்கள். நன்ருக அநுட்டிப்பவர்கள் இன்பமுறுகின்றனர். இந்த விரதம் இந்த உலகத்திலும் அந்த வுலகத்திலும் பயன் தருவது. இது இப்போது சாஸ்திரத்தை விட்டு வெகு தூரம் தள்ளிப் போய்விட்டது. இப்போது இவ்விரதம் அநுட்டிக்கப்படுகிற முறையைப் பார்த்தால் சிவசிவ. விநாயக ஷஷ்டி விரதந்தானு இது என்று கருதும்படி மகாசேவல நிலைமையிலாகிவிட்டது. இதற்கு ஆர்ப்பாட்ட மட்டுங் குறையவில்லே. வெகு பிரமாதம்! இந்த விரதமானது சாஸ்திரத் தண்டவாளத்தை விட்டு வழக்கத் தண்டவாளத்திலேறித் திண்டாடிச் சீரழிந்து இப்போது தான் கொஞ்சம் வேகங் குறைந்திருக்கிறது. நடைமுறை மட்டுமா மாறியிருக்கிறது? பேர் மாருட்டமுங் கொண்டு விட்டது! பிள்ளேயார் நோன்பு என்ற பேர் போய் "பிள்ளேயான் தம்பி" என்ற சிறப்புப் பெயர் பெற்று விட்டது. முந்தி இந்த விரதம் டம்பக் கடலுடன் துன்பக்கடலிலும் விளேயாடி விளங்கியிருக்கிறது. "ஊருக்கு வருமாம் பிள்ளேயான் தம்பி உரலுக்கு வருமாம் இடியும் புடையும்" என்று பழயகாலப் பெண்கள் பழமொழி பாடுகிருர்கள். இதனுல் இந்த விரதம் பழய பெருச்சாளி யென்று தெரிகிறது. இதற்குப் பெண்ணின் தாய் வீட்டார் பொங்கல் வேவு மாதிரி பிள்ளேயான் தம்பி

வேவு எடுத்தினர்களாம். இந்த வேவு பகிரங்கமாக அரிசி காய்கறிவைத்து எடுத்துவது நின்றுவிட்டது. என்று லும் இப்போது பலகார வேவு நிற்கவில்லை. நடவடிக்கை யெல்லாம் தாய்வீட்டிலிருந்தே நடைபெறுகிறது. பிள்ளை யான் தம்பி வந்துவிட்டால் ஒரு ஷோக்தான்! பிள்ளை யான் தம்பி யென்றால் எனக்கு வாய் ஊறுகிறது. நல்ல ஷோக்காய பலகாரம்! ஒரு தட்டுத் தட்டலாம்!

இந்த விரதம் பிடிக்கிற மாதிரியே வேறு தினுசு. காலையில் மூச்சுப்பிடிக்கப் பலகாரம் காபி! இஷ்டமிருந் தால் பழயது ஊறுகாய் சுண்டற்குழம்பு கூட. மத்தியா னம் ஒரு தட்டு. சாயங்காலம் வேறே பலகாரம் காபி! இரவு சாப்பாடு! மாமிசமும் சாப்பிடலாம். ஒரு பத்திய மும் கிடையாது. சர்வ சுதந்திரமுண்டு. ஆனால் விரதத் திற்காக விசேஷப்படியாக நடைபெறுவதில் பலகாரம் ஒன்று. மாலைப் பலகாரத்திற்கும் இராச்சாப்பாட்டுக்கும் இடையில் ஷோக்காய பலகாரம்! அச்சா! எப்படிப் பல காரம்! பிள்ளையான் தம்பி வருஷத்துக் கொருமுறை தான் வருகிறான். அவனுக்கு முதலாவது வேண்டிய சாமான் ஆவாரம்பூ. இந்த ஆவாரம்பூவுக்குள் தான் சங் கதி யிருக்கிறது. எப்படியாவது இந்தப் பூ வந்து தீர வேண்டும். வண்ணக்காய் கண்ணுப்பூ நெல்லுக்குலை முதலியவைகளைச் சேர்த்து ஒரு செண்டு கட்டவேண் டும். இரவு ஏழு மணியாக வேண்டியது தான்! பத்து இருபது முப்பது நாற்பது வகை ஷோக்காய பலகாரங் கள்! காபி! சீமையிலிருந்து வருகிற றொட்டி! ஐயர் கடை யில் ஆறு மாதத்திற்கு முந்திச் செய்து ஈக்கள் முட்டை யிட்ட பலகார தினுசுகள்! இவை யெல்லாவற்றையும் நடு

வீட்டில் வைத்து எங்காவது கிடக்கிற கட்டிக்கிழித்த பழவேட்டியிலுள்ள நூலை யெடுத்து ஒரு மாவைப் பிடித்து நெருப்பைக் கொளுத்தி வாயிற்போட்டு விழுங் குவதோடு இந்த விரதம் முடிந்துவிடுகிறது. ஐயோ! பிள்ளையார். நோன்பே! உன் தலைவிதி இப்படியா போக வேண்டும். தினம் நாலு காலம் சாப்பிட்டவர்கள் இன்று ஐந்து காலம் சாப்படுகிறார்களே! தள்ளுபடியில்லாமல் யாவும் உள்ளே தள்ளுபடி யாகின்றதே! இதுதானா விர தம்! பிள்ளையார் நோன்பு! சிவசிவ. இதொருபுறமிருக்கட் டும். நமது சாமி மரகதப் பிள்ளையார். அதாவது பச்சைப் பிள்ளையார் அதற்காகத்தான் பசுவின் சாணத்தில் பிள்ளை யார் செய்து அதற்கு அறுகம்புல் சாத்தி வந்தனர் நம் முன்னோர். இப்போதுதான் எல்லாம் டம்பத்திற்கென் றாய்விட்டதே! எல்லாம் பெருமைக்காகத்தானே? எல் லாம் வீண் செலவல்லவா? வீண் செலவு செய்தால் அதோடாவது தொலைகிறதா? இல்லை. கொள்கையும் தர்ம மும் குப்புறக் கவிழ்ந்து போகின்றன. இன்னுங் கொஞ்ச நாள் சென்றால் சோறு கறி யெல்லாம் தங்கத்திலே செய் யப்பட்டுவிடும். இந்தக் கணக்கில் பிள்ளையான் தம்பிப் பிள்ளையாரை வெள்ளியிலே செய்து விட்டார்கள். நமது பாம்பரைப் பச்சைப் பிள்ளையார் வெள்ளைப்பிள்ளையா ராகிவிட்டார். பிள்ளையார் மட்டுமா? மாவிலைகூட வெள்ளி! இயற்கை தொலைந்து எங்கும் செயற்கையாகிவிட்டது. இந்த விரதத்தை யோஜித்துப்பார்த்தால் ஒரு களியாட்ட மாகவிருக்கிறது. இந்தவிரதம் வழிக்கு வந்தால்தான் நமக்குக்கதி மோக்ஷமுண்டு. தெய்வத்தை ஒழுங்காக வழிபடாவிட்டால் ஒன்றும் உருப்படாது!

# வைகுண்ட வாசல்

சென்ற வாரத்தில் வைகுண்ட ஏகாதசி போய் விட்டது. வைகுண்ட ஏகாதசி விரதம் பிடித்தால், பலன் அதிகமென்று நூல் கூறுகிறது. அதில் சைவ வைணவ பேதமுமில்லை. எல்லாருங் கொண்டாடுகிறார் கள். பிடிக்கிற மாதிரியாகப் பிடித்தால், அது நல்ல விரதந்தான். மாறுதலெல்லாம் மாறுகிறபோது இது மட்டும் என்ன? கொம்போ? இதுவும் மாறிப்போய் விட்டது. திருமயத்தில் சொர்க்கவாசல் திறக்கப்பட் டது. காரைக்குடிப் பக்கத்திலிருந்து திருமயம் வரு கிற ரோட்டைக் கண்ணாலே பார்க்க முடியவில்லை. அவ் வளவு புழுதி. மாட்டுவண்டி கடும் வேகமாய்ப் போகி றது. குதிரை வண்டி பறக்கிறது. மோட்டாரைப்பற் றிச் சொல்ல வேண்டியதில்லை. தாறுக்கம்புகளைக் கொண்டு மாடுகளின் தோலைப் பலர் உரித்து விட்டார் கள். ஸ்நானம் செய்து விபூதியணிந்து பரமபக்தர்க ளான மனிதரை வைகுண்ட வாசல் திறந்திருக்கிற சம யத்தில் இழுத்துச் செல்லும் வாயில்லாப் பிராணிகளான பசு மாடுகளுக்கு ஏகாதசிப்பலன் தாறுக்கம்புக்குத்து தான். என்ன கருணை! என்னபக்தி!! என்ன விபூதி!!! எவ்வளவு பெரியபட்டை நாமம்! வெளி வேஷத்தி லென்ன உபயோகம்? கருணையில்லையே! இது வரையில் சில சமயங்களில் குதிரைவண்டியோடு மாட்டுவண்டி பந் தயம் போட்டது. இப்போது மோட்டாரோடு போட்டி போடுகிறது. இது கிடக்க, சொர்க்கவாசலில் இடிமிகப் பலம். வீட்டிலே செய்கிற அக்கிரமங்களையெல்லாம்

கோவிற் கதவில் நுழைந்து நிவர்த்தி செய்துவிடலா மென்று எண்ணுகிறார்கள். வீட்டிலே வியபிசாரஞ் செய்துவிட்டு, சொர்க்கவாசக் கதவில் நுழைந்துவிட் டால் தீராது என்று நான் நினைக்கிறேன். இது பாதி விரதம். இனிப்பாதி சீட்டாட்டம். ஏகாதசி விரதம் அநேகமாக சூதாட்ட விரதமாகிவிட்டது. எத்தனையோ மாதிரி மாதிரியான சூதுக்கருவிகள். அமெரிக்கன் சீட் டுக் கம்பெனிக்காரனுக்குக் கொஞ்சம் பணம். பகலில் பலகாரம் உண்ணுகிற நேரம் போக மிகுந்த நேரமெல் லாம் சீட்டு ; சொற்கேட்டான் ; தாயக்கட்டம் ; பன்னாங் குழி ; நாயும் புலியும் ; இத்யாதி சாமக்கிரியைகள். எப் படியாவது உறக்கமில்லா திருக்கவேண்டும்! இன்னும் சில பக்தர்களுக்கு சுருட்டில்லாவிட்டால் உறக்கம் வந்து விடும். உறங்கத்தான் கூடாதே ; அதற்காக வாயிலே ஒரு சுருட்டு. சில பக்தர்களுக்கு பொடியில்லாவிட்டால் உறக்கம் வந்துவிடும் ; அதற்காக ஒரு பட்டைபொடி. சில பிராணிகளுக்குச் சும்மா சீட்டுப்போட்டால் ருசிக் கிறதில்லை. அதற்காகப் பணம் வைத்துப்போடுகிறது. நாற்பதறுபது நூறிருநூறு நஷ்டலாபம். தாய் தகப் பனுக்குத் தெரிந்துந் தெரியாமலும் பலவாறாக சாமர்த்தி யம் நடைபெறும்.

துவாதசிகாலையில் ஆகாரம் செய்தால், இன்னும் தூக்கம் கடுமையாகவரும். அதற்காக இன்னும் நன் றாக ருசிக்கக்கூடிய விளையாட்டுக்கள். தூங்கிவிட்டால் பலனை மோகினிப்பிசாசு கொண்டுபோய் விடுவாளாம். பலே நல்லவிரதம் !! தெய்வமே !!! முன்னோர்கள் கொண் டாடிய பல உயர்ந்த விஷயங்கள் இப்படித்தான் சந்தியில்

நிற்கின்றன. இந்த விரதங்களின் நோக்கமென்ன? நடைபெறுகிற முறை யெப்படி? "ஏகாதசிக்குச் சீட்டுப்போடுகிறது; எல்லா ஊரிலும் வழக்கந்தான்; பல நாளைய வழக்க"மென்று சொல்வார்கள். இதற்கு, நானென்ன செய்வேன்; "வழக்கம்" என்று சொல்லி விட்டால், வேறே ஒன்றும் வேண்டாமா? நியாயம் அநியாயம் பாவம் புண்ணியங் கருதவேண்டாமா? வைகுண்ட ஏகாதசியே! உன் பெருமையும் இப்படிப்போனது உன் தலைவிதிதான் போலும்!



## சினிவெடி

தீபாவளி வந்துவிட்டது! இது வருஷத்துக்கொரு முறை வருகிறது. அதோவருது இதோவருது என்று சொல்லப்பட்டு பணமில்லாத வீடெல்லாம் இழவு வீடாக்கி பணக்கார வீடெல்லாம் பரதேசித் துணிகளை நிறைத்து புடவைக் கடைகாரர் புளுகுக்கு உட்பட்டு சினி வெடியைச் சுட்டுக்கொண்டு ஒரு இரவு ஒரு விடியற் காலத்தோடு ஓடிப்போகிறது. இதுதான் தீபாவளி. இந்தத் தீபாவளியை நம்பி புதுச்சேரியில் பதினொன் றரை லட்சத்துக்கு பட்டாஸ் கட்டுகள் வந்திருக்கிறதாக எனக்குத் தாக்கல் வந்திருக்கிறது. அதைக்கேட்டது முதல் என் வயிற்றில் நெருப்புப் பிடிக்கிறது. "காசைக் கரியாக்க வேண்டுமானல் சினி வெடியை வாங்கிச்சுடு" என்று பலரும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அநேகமாக நமது ஜனங்கள் வாய்ப்பேச்சில் வீரர் களாகவும் வேதாந்திகளாகவு மிருக்கிறார்கள். ஆனல் செய்கையில்...சொன்னல் கோபம் வந்துவிடுகிறது. சினிவெடிக்குக் காசு கொடுப்பது கரியாக்குவதற்கு முதல்தா யோசனை என்று சொல்லுகிறார்கள். இவர்கள் வாங்காமலிருப்பார்களா! பத்து வருஷத்திற்கு முந்தி ஒரு வெடிக்கட்டு நாலுதம்படி. இப்போது இருபத்தி நாலு தம்படி. காரணமென்ன? நாம் சொன்ன விலை யைக் கொடுத்து வாங்குவது தான். நமக்குத்தான் அவசியமின்னது அனவசியமின்ன தென்பது விளங்க வில்லையே! எதையாவது ஒருமுறை உபயோகித்துவிட் டால், பிறகு அதில்லாவிட்டால் அந்தச் சடங்கு நடக்க

வில்லை. இவ்வளவு கதையும் சிறு பிள்ளை கரியாக்குவதற்கு. இது நிற்க, பேரன்பேத்தி யெடுத்த பெரிய கிழவர்கூட சீனிவெடி சுடுகிறார். பணப்பெட்டி கையிலிருப்பதால் சில விடங்களில் வீதிகளில் சரஞ்சரமாகக் கோத்துக்கட்டித் தீ வைக்கின்றனர். என்ன திருவிளையாட்டு. என்ன ஆநந்தம். பெரியவர்கள் கூட விளையாடக் கிளம்பினால் எப்படி ஜாதி முன்னுக்கு வரும்? ஒரு பலனுமில்லாமல் நம்முடைய பணத்தை சீனாதேசத்திற்கு அனுப்பிவிட்டு மூக்கைப் பிடுங்கச் சீனிவெடியைப் புகைக்காமலிருப்பார்களா? வடநாட்டில் சீனிவெடி சுடுவதில்லையென்று தீர்மானித்து விட்டார்களென்று நம்பிச் செய்தி சொல்லுகிறது. அப்படிக் காலம் நமக்கெப்பொழுது வரப்போகிறது?





# பிள்ளை வளர்ப்பு

அந்தக் காலத்திலே நான் சின்னப்பிள்ளையாயிருந்த போது எங்கள் பாட்டியார் வீட்டிலே திருப்புல்லாணியில் வாங்கி வந்த ஒரு ஓலைப் பெட்டி யிருந்தது. அதற்குள் பதினைந்து தட்டுகள் அறையறையாகத் தடுக்கப் பெற்றிருந்தன. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மருந்து இருந்தது. பிள்ளைகளுக்கு ஏதாவது வியாதி வந்தால் அதிலே ஒரு மருந்தை யெடுத்து உறைத்துக் கொடுத்தால் சௌக்யமாகப் போய்விடும். வைத்தியர்கள் அதிகமாக வீடுகளுக்கு வருவதில்லை. ஏதாவது தடபுடலாயிருந்தால் யாராவது பழைய நாளைய வைத்யன் வந்து ஏதாவது கொடுப்பான். இது மிக அபூர்வம். எத்தனை பெரிய வியாதிக்கும் நம்மவர்களே மருந்து கொடுத்துக் குணப்படுத்திவிடுவார்கள். இது பழைய கதை. அந்தக் காலத்திலே இருந்த பயித்தியகாரப் பெட்டி மக்களுக்கு வைத்தியந் தெரியுமுந்திப் பிள்ளை பெறத் தெரியாது! பிள்ளைப் பெறுகிற காலத்தில் அவர்களுக்குக் கட்டாயம் பிள்ளையை வளர்க்கத் தெரியும்! இந்த உலகத்திலே ஒரு பொருளைப் பெற்றால் அதை வைத்துக் காப்பாற்றத் தெரிய வேண்டும். அநுபவிக்கவும் தெரியவேண்டும். நமக்குக்கூட ராஜாங்கத்தார் சொல்லவில்லையா? உங்களுக்கு சுயராஜ்யந் தரவேண்டியதுதான் ; ஆனால் அதை ஒழுங்காக வைத்துக் காப்பாற்ற முடியாது ; உங்களுக்குப் பக்குவமில்லை ; ஆனால் கொஞ்சங் கொஞ்சமாகப் படிப்படியாகத் தருகிறோம்" என்று சொல்லவில்லையா? அதற்குப் பெரிய பெரிய பேர்வழிகளெல்லாம் ஆமா

போடவில்லையா? அப்படித் தான் நமது வாழ்வுமிருக் கிறது. நம்மள் வீடுகளில் பன்னிரண்டு வருஷத்துப் பெண், பிள்ளைப் பெறுகிறதே! அதற்கு அந்தப் பிள் ளையை வளர்க்கத் தெரிகிறதா? நேற்றுப் பிடுங்கின கீரைத்தண்டு மாதிரி தலையுங் காலும் தொங்குகிற சின் னப்பிள்ளையைக் கையிலேயாவது வைத்துக் கொள்ளத் தெரிகிறதா? இரவிலே உறக்கம் விழிக்க முடிகிறதா? தண்ணீரைத் தலையிலே ஊற்றிக் குளிப்பாட்டினுல் மூக்கி லேறிப் பிள்ளை செத்துப்போகிறது. பாலைச் சங்கிலே ஊற்றி ஒரு வாய் புகட்டத் தெரிகிறதா? வெற்றிலைச் சாறுயிருந்தாலும் புகட்டுவதற்கு அடுத்தவீட்டு வைத்திய ரம்மா தான் வரவேண்டியிருக்கிறது. பிள்ளை திரும்பிப் படுத்தாலும் டாக்டர்தான் வரவேண்டும். பிள்ளைப்பெறத் தெரியும்; ஆனுல் அதற்குப் பால் புகட்டவும் மருந்து புகட்டவும் தெரியாது! இப்போது எங்காவது ஒன் றிரண்டு பெரியவர்களிருக்கிறுர்கள். இன்னும் கொஞ்ச நாள் சென்றுல் அதுவும் போய்விடும். அப்புறம் எல் லாம் டாக்டர் மயம்! பச்சைப் பிள்ளைக்குத் தடுமன் பிடித் தால் நாமக்கட்டியை உரைத்துத் தடவிய காலம் போய் விட்டது! இப்போது கால்சட்டைப் பேர்வழிகளைக் கூட்டி வந்து நூற்றுக் கணக்காகக் கொட்டிக்கொடுக்க வேண்டிய காலம் வந்திருக்கிறது. அதோடு மட்டுமா டாக்டர் விடுகிறுன்! "செட்டிவீட்டு இழவு இப்படித் தானையா? சனியன்! பிள்ளைக்குக்கொஞ்சம் சிரமமென்று தெரிந்தால் உடனே ஒரு ஆள் விட்டாலென்ன?" என்று கொஞ்சம் திட்டி வாழ்த்துவதை நான் நேரே பார்த்திருக் கிறேன். இப்போது நாகரிகம் பழுத்துப் போய்விட்டது.

தாய்க்கு மருந்து சேர்க்கவும் புகட்டவும் பிள்ளையைக் குளிப்பாட்டவும் கையில் வைத்துக்கொள்ளவும் தெரியாமல் போனதொருபுறந் தொலைபட்டும். இப்போது அநேகமாகப் பால் கொடுக்கக்கூட முடியவில்லை சில நாகரிகப் பெண்களுக்கு! பெங்களூர் பட்டுக்கட்டி நகைகளை வாரிப் போட்டுக்கொண்டு தேர்த்திருவிழாவில் அலைக்கத் தான் இந்தக் காலத்துப் பெண்கள் ஆவார்கள்! இப்போது பிள்ளைகளுக்குப் பாலும் அகப்படுகிறதில்லை. வாடகைக்கு ஆள் பிடிக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் கழுதைப் பாலைக்கூடச் சேர்த்து வருகிற சீமைப்பால் புட்டியைக் காய்ச்சி தோலுக்குழாய் போட்டுப் பிள்ளைகள் சப்புகின்றன. சீமையிலிருந்து வருகிற ரொட்டியை வைத்து வயிற்றி லடைக்கின்றனர். அதற்கு ஏதாவது வியாதி வந்தால் சீமை மருந்து! பிறக்கும்போதே சீமைச் சரக்கு ஏறி ரத்தத்தில் கலந்து இரவல் பிள்ளையாகித் தொலைகிறது! அபிமன்னன் மாதிரிப் பிள்ளைக்கு எல்லாருக்கும் ஆசைதான். கிருஷ்ணன் மாதிரிப்பிள்ளைக்கு ஆசையாகத்தானிருக்கிறது. அபிமன்னனும் கிருஷ்ணனும் ரொட்டியும் சீமைப்பாலும் உண்ணவில்லை யென்பதை மறந்து விடுகிறார்களே!

இனி இந்தப் பிள்ளைகள் கொஞ்சம் பெரிதாகப் போனால் வளர்க்கிறமாதிரி சொல்ல வேண்டியதில்லை. "என் தங்கராசா! அண்ணனைத்திட்டு! அவர்கள் மேலே எச்சியைத் துப்பு! இந்தக் கம்பை யெடுத்து முகத்திலே அடி! இந்தக் குச்சியாலே அம்மான் கண்ணைக்குத்து! நொப்பச்சியை மூக்கையும் கழுத்தையும் நறுக்குவேனென்று காட்டு!" என்று உபதேசம் பண்ணுகிறார்கள்.

அப்பச்சி மூக்கையும் கழுத்தையும் நறுக்கினால் யார் வெள்ளைச்சீலை யுடுத்தி நாலுகாலுக்கு நடுவேயிருப்பது? இப்படிப் பிள்ளைகளுக்கு உபதேசம் பண்ணினால் அந்தப் பிள்ளை யெப்படி உருப்படியாகும். தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டு மென்றபடி அந்தப் பிள்ளை பாழாய்ப்போகுமா இல்லையா? பிள்ளைக்கு ஒரு வருஷமாகு முன்னாலே சில பிசாசுகள் வந்து "அப்பச்சி இந்த அப்பத்தாளைக் கலியாணம் பண்ணிக்கிறியா? அந்த அத்தியாண்டியைக் கலியாணம் பண்ணிக்கிறியா? ஆமா என்று சொல்லு" என்று உபதேசிக்கிறார்கள். இன்னும் சில அசட்டுத் தாய்மார்கள், ஏதாவது சொன்னது கேட்காவிட்டால் நிழலைக்காட்டி "அதோ பார்! பூச்சாண்டி ஓடியா ஓடியா அடியாத்தே அதைப்பார்" "இந்தாவருது மண்டைப் பூன" என்று சொல்லுகிறார்கள். பிள்ளை பயந்து நடுங்கி வெடு வெடு வென்று ஆட்டிக்கொண்டு வந்து வட்டியிலிருந்த சோறு தின்னுகிறது. உடலாடக்காலாட வாயாடக் கையாடக் குடல்கும்பியெல்லாம் ஆடக் கஞ்சி குடிக்கிறது. பயத்தோடே தின்னுகிற சோறு உள்ளேபோய் ரத்தத்தில் கலந்து எல்லாம் வெடு வெடுப்பாகிவிடுகிறது. பிறகு பட்டப்பகலில் நிழலைக்கண்டால் "பூச்சாண்டி" என்று சொல்லிக்கொண்டு "வாள்" என்று கத்துகிறது. அப்படி இருளடித்து வாய்கையெல்லாம் அநேகம் பிள்ளைகளுக்கு நின்றபடியே நின்று போகிறது! இப்படிப் பிள்ளைகள் செத்துப்போனாலும் போகலாம். இதைச் சொல்லி, ஐபா சாமிகளா! இதற்கு விமோசனம் பண்ணுங்களென்றால் பைரவசாமி வாகனங்கள் மாதிரி பல அறிவாளிகள் புறப்பட்டுவிடுகிறார்கள். இந்தப் பேர்வழி

களைத் தாயார் நன்ருக வளர்க்கவில்லை. பாவம்! எனது புறம்பேசிச் சகோதரர்களே! உங்கள் பிள்ளைகளை நன்ருக வளர்த்து வாருங்கள்! என்னை ரெண்டு திட்டுத்திட்டினு லும் பாதகமில்லை. கொஞ்சமாவது காரியத்தைக் கவனிக் கிற புத்தி என்னைத் திட்டுகிறவர்களுக்கிருந்தால் அவர்க ளுடைய வசவுகளை அர்ச்சனையாகவே மதிப்பேன். இல்லை யென்று முறுக்கினுல் நானும் பணக்காரன் தான். மூன்று மோட்டார் வாங்கி வைத்து சக்கையடி அடிக்க என் கையில் பணமிருக்கிறது. உலகம் இடிந்து என் தலை யில் விழுந்தாலும் தாங்கத் தைரியமிருக்கிறது. வசவு கொடுக்கிறதென்று துணிந்தால் என்வாய் காளவாயாகி விடும். எழுத ஆரம்பித்தால் ரெண்டாயிரம் பக்கம் ஒரு மூச்சிலெழுதுவேன்! ஜாதீய விஷயத்தில் நியாயத்துக் காக ஜெயிலுக்குப் போகவும் வைகுண்டம் போகவும் இப்போதே தயார்! தொண்ணூற்ருறூர்க் கூட்டம் ஒழுங் காக இருக்கிறவரை கட்டுப்பட்டு நடப்பதென்று தீர் மானித்துவிட்டேன். அதற்கு ஏதாவது வந்தால் அன்று நான் படே பேர்வழியாகிவிடுவேன்! அப்புறம் என் பேச்சு வேறு. எல்லாம் வேறுதான். பிறகு யாருக்கு யார் வேண்டியிருக்கிறது!



# மகனுக்குக் கலியாணம்

எனது நண்பரொருவருக்கு அருமையான ஒரு ஆண் குழந்தை. முப்பத்தைந்து வயதுக்குமேல் தேடித் தவமிருந்து பிறந்தது. என் நண்பர் நன்ருகப் படித்தவர். நல்ல யோக்கியர். தருமகுணமுள்ளவர். சாது. பெண்டாட்டியைக் கண்டால் இந்திரசித்தனுடைய நாக பாசத்தைக் கண்டமாதிரிதான். அதொன்று தவிர மற்றெல்லாம் என் நண்பரிடத்தில் அச்சா! நிற்க, அருமை மகனை நன்ருகப்படிப்பிக்க வேண்டுமென்பது எனது நண்பருடைய நோக்கம். அவர் மனைவியாருக்கும் பிள்ளை கெட்டிக்காரனுக வரவேண்டுமென்பது தான் கருத்து. ஆனுல் பிள்ளை பள்ளிக்கூடத்திற்குப் போனுல் வாடி வதங்கிப் போகுமென்று கருதினுள். ஆகையால் அருமை மகன் பள்ளிக்கூடத்திற்குப் போக முடியவில்லை. ஏன் வரவில்லையென்று கேட்டுக் கண்டித்தால் அன்றைக்கே பிள்ளையை வீட்டில் நிறுத்திக் கொள்வார்கள் போலிருந்ததால் அவனை வாத்தியார் ஏனென்று கூடக் கேட்பதில்லை. படிப்புமில்லாமல் தலையணைக்குப் பஞ்சமுக்குகிற மாதிரி பலகாரமும் சோறுமாக வயிற்றில் மாளுமல் வைத்தடைக்கவே பையன் வெகு வேகமாகப் பருத்துவந்தான். வயது ஒன்பது ஆகிவிட்டது. சின்ன அரிச்சுவடி படித்து முடித்து விட்டான். பெரிய அரிச்சுவடி படித்தும் படியாமலிருக்கிருன். அப்போதுதான் முந்திரிலக்கம் பாடம் எழுதிப் போட்டிருக்கிறது. கன்றுக்குட்டியின் வாலைப் பிடித்தானுனல் அது தானுக மூச்சுத் திணறிக் கீழே விழுகிறவரை பிடித்த பிடியை விட

மாட்டான். சுருட்டை வாயிலும் மூக்கிலும் வைத்திருப்பான். பித்திக்காய் அடிப்பதிலும் கிட்டியடிப்பதிலும் குட்டிச்சுவரேறிக் குதிப்பதிலும் முதற்றாமாகத் தேறி யிருந்தான். அதற்கு மேலேயும் போகக்கூடிய சாமர்த்தியமிருந்தாலும் சிறு பிள்ளைதானே! இந்த சந்தர்ப்பத்தில் கலியாணம் செய்துவிட வேண்டுமென்று தாயார் கருதிவிட்டாள். எனது நண்பருக்குக் குறுணி வருத்தம். என்ன செய்கிறது? படிப்பு ஏறவில்லை. தடிப்பயலாக உலக்கை மாதிரி வளருகிறானே! என்ன செய்கிறது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். கலியாணப் பேச்சு அடுப்படியிலாரம்பித்து ஊரணிக்கரை சிவன் கோவில் வழியாக ஊருக்குள் பரவிவிட்டது. பெண் வைத்திருக்கிற பிரபுக்கள் யோஜித்தார்கள். பணமிருக்கிறது. செட்டியார் நல்லவர். அவ்வளவோடு பெண்ணுக்குத் தகப்பனார் சம்மதித்துவிட்டார். தாயார் யோஜித்தாள். வீடு பெரிதாயிருக்கிறது. மோட்டாரிருக்கிறது. பணம் ரொம்ப இருக்கிறதாம். மாப்பிள்ளை சிவப்பாயிருக்கிறது. கிராமத்திலிருந்து நெல் வண்டி வண்டியாக வாசலிலே வந்து இறங்குகிறது. இதைவிட வேறென்ன நமக்கு வேண்டும் என்று யோஜித்து முடிவு செய்து விட்டார்கள். இதை விட்டு வேறே வீடு வேண்டாமென்று சண்டிமாடுமாதிரி குப்புற விழுந்து படுத்துவிட்டாள். கைகொடுத்துக் கலியாணப் பேச்சு நடக்கிறது. பெண்ணின் தகப்பனாரிடத்தில் என்னைப் போன்ற சில ஆசாமிகள் போய் "என்ன ஐயா! பையன் சுத்த உபயோகமற்றவனா யிருக்கிறான். பெண்ணைக் கட்டப் போகிறீர்களே! பெண்ணுதவுங்

காலே பிதாவானவன் மாப்பிள்ளேயின் படிப்பை யல்லவா விரும்பவேண்டும். இல்லாவிட்டால் பெண்ணுக்குத் துன்பமல்லவா? பெண்ணேப் பெற்று வளர்த்துத் தடிப் பயல் கையில் கொடுக்கலாமா?" என்று சொன்னார்கள். அவர் சிரித்துக்கொண்டு "நீங்கள் சிறு பிள்ளேகள். அநு போகம் போதாது. பையனே ஒரு கணக்குக்கு ஊருக் குக் கூட்டிவிட்டால் சரியாகப் போகும். எல்லாம் பொருத்தமாக வருமா? கலியாணத்தைப் பண்ணிவிட்டு ஊருக்குப் போகவேண்டும். வந்து ஒரு வருஷத்திற்கு மேலே ஆச்சு. பேசின இடத்திலே யெல்லாம் இந்த இடந்தான் பெண்பிள்ளேகளுக்குப் பிடித்திருக்கிறது. வேறே இடம் பார்க்கிறதானல் லேசிலே முடியாது. ரொம்ப நாளாகும். என்னமோ தலேயிலெழுதினபடி யிருக்கிறது. விதியை யார் விலக்க முடியும்" என்று அவர் சொல்லிவிட்டார். மாப்பிள்ளேக்குத் தகப்பனு ரான எனது நண்பர் யோஜித்தார். எட்டு வயதிலும் ஒன்பது வயதிலும் செய்கிற பொம்மைக் கலியாணம் அவருக்குப் பிடிக்கிறதில்லே. மனேவியிடம் போய் "என் னென்கிறேன்! பயலுக்கு அவர்கள் வீட்டுப் பெண்ணேச் செய்கிறோ மென்கிருர்கள். என்ன சேதி?" என்முர். அது சரிதான். இதுக்குக் கேட்கவா வேண்டும். எல் லாம் பேசியாச்சு. ஐயரைக் கூப்பிட்டு நல்லநாள் பாருங் கள்" என்று இடி இடித்த மாதிரி பதில் சொன்னுள். எனது நண்பரும் யோஜித்தார். அதுவும் சரிதான். பயலோ உலக்கைக் கொழுந்தாயிருக்கிருன். இன்னும் கொஞ்ச நாள் சென்ருல் எப்படி வருவானே? தெரிய வில்லே. இப்போது மதிப்பாக நல்ல வரும்படியோடு

வலிய வருகிற பெண்ணை வேண்டாமென்றால் பின்னடி ஒரு வேளை வராவிட்டால்—அல்லது ஸ்ரீதனம் முதலிய வரும்படி குறைந்து போனால் வீட்டுத் தேவதைக்கும் அழமுடியாது. என்று யோஜித்து முடிவாக சரியென்று ஐபரையழைத்து நாள் வைத்து அடித்து முழக்கிக் கலியாணத்தை முடித்துவிட்டார். நானும் கலியாணத்திற்குப் போயிருந்தேன். பெரிய பெரிய உத்தியோகஸ்தர்கள் வந்திருந்தார்கள். அநேகம் பிரபுக்கள் விஜயஞ் செய்திருந்தார்கள். மோட்டார் முப்பதுக்கு மேல் வந்திருந்தன. ஐயர்மார்களுக்குத்தான் சொல்ல வேண்டாமே! கிராமத்து ஆட்கள் வேறே நிறைய வந்திருந்தார்கள். சக்கை போடு போட்டுக் கலியாணம் நடந்தது. சின்ன மாப்பிள்ளையும் பெண்ணையும் மணையில் வைத்திருந்தபொழுது, சில பெண்கள் "சின்னப்பிள்ளைகளுக்குக் கலியாணஞ் செய்தால் மணையிலிருக்கிறபோது அழகாயிருக்கிறது" என்று பேசிக்கொண்டதோடு தங்கள் பிள்ளைகளுக்கும் சீக்கிரமாகக் கலியாணம் செய்து பார்த்துவிட வேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்டார்கள். கலியாணம் முடிந்ததைப்பற்றி யெல்லாருமே சந்தோஷப்பட்டார்கள். எனது நண்பரும் சந்தோஷப்பட்டார். ஆனால் "பெண் பெரிய மனுஷியான பெண். பையனுக்கு வயது ஒன்பதுதான்" இந்த சங்கதி அவர் மனதை அறுத்துக் கொண்டிருந்தது.



## கலியாணமா? வரும்படியா?

பல்லுப்போன வாலிபர்களும், அற்பத்தனமுள்ள பெரிய மனிதர்களும், முதலற்ற லக்ஷப்பிரபுக்களும், அறிவற்ற மோதாவிகளும், அன்பற்ற பக்தர்களும் மலிந்த இக்காலத்திலே எப்படி வியாபாரம் செய்வதென்பது கொஞ்சம் யோசனையிலிருக்கிறது. நான் பயப்படாதவனு யிருந்தாலும் கடையிலே வியாபாரம் நடைபெற வேண்டுமாதலால், இரண்டையும் கலந்து வேலை செய்கிறேன். நான் சொல்வது கடுமையாக இருந்தால் நீங்கள் ஒழுங்கான வழியில் வந்துவிடுங்கள். அப்போது சரியாகப் போய்விடும். என்னோடு சண்டைக்கு வர வேண்டாம். ஆனல், சரியாக நடந்து சமாதானமாக வந்துவிடுவது தான் நலம்.

கலியாண வீட்டிலே தாலிகட்டுவது ஒரு சடங்கு. தாலிக்கு உரியவன் மாப்பிளை. ஆனால், நமது ஜாதியில் தாலிகட்டுகிறவர் பெரியவர். அவருக்கும் பெண்ணுக்கும், முன்னும் பின்னும் சம்பந்தமேயில்லை. இது நமது வழக்கம். வேறு ஜாதியில் பிறந்த எனது நண்பரொருவர் எனக்கொரு கேள்வி போட்டார். "என்னய்யா! உங்கள் ஜாதியில் சொந்தப் புருஷன் தாலிகட்டுகிறதில்லையாமே!! கிழவர் தாலி கட்டுகிறாராமே!!! அதென்ன பைத்தியக்கார வழக்கம்?" என்று பரிகாசமாகக் கேட்டார். விஷயம் எப்படியிருந்தாலும் வேறு பேர்வழி நம் ஜாதியைக் கேலி பண்ணுவானானல் எனக்குக் கொஞ்சம் ஆத்திரம் வாராதா? நான் பதில் சொன்னேன். "ஆம் அது உண்மைதான், எங்கள் ஜாதியில் பெரியவர்தான்

திருப்பூட்டுகிறது. அதற்குக் காரணம்:—நல்ல குலத்திற் பிறந்தவராகவும், நல்லொழுக்க முடையவராகவும், நிறைந்த பொருள் உள்ளவராகவும் பிள்ளை குட்டிகள் குறைவில்லாதவராகவும், போக்கியராகவுமுள்ள ஒருவரைப் பார்த்து அவர் கையில்-அதாவது அவருடைய சம்மதத்தின் பேரில் திருப்பூட்டினுல் விவாகம் தவறுதலாக நடைபெறுதென்பது எங்கள் முன்னோர்களுடைய அபிப்பிராயம். இதனுல், அக்கிரமமான முறையில் கலியாணம் நடக்காது விவகாரங்கள் ஏதாவதிருந்தால் ஷை பெரிய மனிதர் ஒழுங்கு செய்து விடுவார். இதிலென்ன ஐயா தப்பிதம்" என்று சொன்னேன். அவர் இதைக் கேட்டு மிக மிக சிரிக்க ஆரம்பித்துவிட்டார். "நீங்கள் சொல்வதெல்லாம் நன்ருயிருக்கிறது. ஆனுல், சங்கதிமட்டும் சரியாயில்லை. உங்கள் ஜாதியில் நடக்கிறதெல்லாம் சரியாக இப்போது நடக்கிறதா? எந்தக் கலியாணத்திற்கும் பெரியவர் தாலிகட்டப் போய்விடுகிருரே! பெண்ணுக்கு வாங்கிச் செய்வது சமூகத்தைப் பாழ்படுத்துகிறதென்று தெரிந்திருந்தும் அங்கேயும் போய் தாலி கட்டுகிருரே" என்று சொன்னுர். இந்த சங்கதி உண்மைதான். பெரிய மனிதரென்ருல் பெரிய குணங்கள் வேண்டும் அற்பபுத்தி உதவாது. அக்கிரம வழியில் போகிறவனிடம் தாக்ஷிண்யம் உதவாது. நியாயத்தை அநுசரிக்க வேணும். நியாயமில்லாத காரியத்தில், தான் சேராதிருப்பதோடு அதைத் தொலைக்கவும் வழி பார்க்க வேண்டும். இதெல்லாம் இல்லாவிட்டால் அவன் பெரிய மனிதனுகமாட்டான். பெண்ணுக்குப் பணம் வாங்குகிறவனுக்கும் கசாப்புக் கடைக்காரனுக்

கும் வித்தியாசமேயில்லை. அதனால், ஜாதி பாழடைந்து வருகிறது. அந்தக் கலியாணத்தில் தாலிகட்டப் போனால் கூலிக்காகப் போகிறாரென்று தான் நான் சொல்வேன். இன்னொன்று. திருப்பூட்டுகிறவருக்கு கடகங்களிலும் மூட்டைகளிலும் பாக்கு கொடுக்கிறார்கள். பணம் வேறே கொடுக்கிறார்கள். பழமும் சட்டியும் கொடுக்கிறார்கள். தாலி கட்டுகிற பெரிய மனிதர் சந்தோஷமாக ஒரு வண்டி நிறைய வாங்கிக்கொண்டு வருகிறார். பணங்கொடுக்கிற மாப்பிளை செலவேட்டில் இவருக்குக் கொடுப்பதையும் சேர்த்தெழுத வேண்டியிருக்கிறது. இந்தக் கலியாணத்தில் தாலிகட்ட வரமாட்டேன் என்று பெரிய மனிதர்கள் சொல்லிவிட்டால் “அக்கிரமமான கலியாணம்” என்று மற்றவர்கள் தெரிந்துகொள்வார்கள். அப்படியில்லாமல் கூப்பிடுகிற வீடுகளுக்கெல்லாம் போய்த் தாலி கட்டுவது சரியாகாது. பெரிய மனிதரைப் பெருமையாக நடத்த வேணும். அப்படியில்லாமல் தாலி கட்டுவதற்குப் பெரிய மனிதரென்று ஒருவரைக் கூப்பிட்டு அவருக்குச் சட்டியும் பணமும் கொடுத்தால், அவரை அவமானப்படுத்துவது போலாகிறது. பெரிய மனிதராயிருந்தால் தாலி கட்டிவிட்டு சாப்பிட்டுச் சந்தோஷமாகப் போய் வருவதுதான் முறையாகும். பணமெதுக்காக வாங்குவது? கூலியா? லஞ்சமா? சரியான-நியாயமான கலியாணத்துக்குத் தாலி கட்டப் போகவேண்டும். கால் காசுகூட வாங்கக் கூடாது. பாக்கு மூட்டைகளை வாரிக்கொண்டு வரக் கூடாது. அதுதான் பணக்காரப் பெரிய மனிதருக்குக் கௌரவம். இப்பொழுது இவ்வளவோடு கடையைக் கட்டுகிறேன்.

# கோடங்கி

எனது நண்பர் அவருடைய உலக்கை மகனை இணக்கமாக நடத்திவந்தார். அவனுக்கு வர வர வீட்டுப்பலகாரம் பிடிக்கவில்லை. கடைக்குப்போக ஆரம்பித்துவிட்டான். காலிப்பயலாக ஊரைச் சுற்றுகிறது. காபி கிளப்பில் சிநேகிதர்களோடு குடிக்கிறது. சோற்று நேரத்திற்கு வீட்டுக்கு வருகிறது. இப்படியாய்விட்டான். தகப்பனார் ஏதாவது சொன்னால் பயலுக்குத் தாயாரொன்று! மாமியாள் ஒன்று! இரண்டும் சண்டைக்குக் கிளம்பிவிடும். ஆதலால் கேட்டபடி பணங் கொடுத்துக் கொண்டிருந்தார் எனது நண்பர். பாவம்! அப்பாவி! ஆனால் பிள்ளையை நல்ல வழிக்குக் கொண்டு வர வேண்டுமென்ற ஆசைமட்டும் நிறைபவுண்டு. இந்த இரண்டு பிசாசுகளுக்கு மட்டும் பயந்ததோடில்லாமல் வேறொன்றுக்கும் அவர் பயந்தார். பையனுக்குச் செலவுக்குப் பணமில்லையென்றால் எங்கே உசிதம் போட்டு எழுதிக் கொடுத்து மானத்தைக் கெடுக்கிறானோ வென்ற கவலை அவருக்கு மெத்தவுண்டு. இப்படிக் காலக்ஷேபம் பண்ணி வருகிற காலத்திலே நல்ல ஐப்பசி மாதம். ஒரு வாரம் மேகம் மூட்டம் போட்டு அடைமழை கொட்டுகிறது. அப்போது பயல் வழக்கம் போலவே காபி கிளப்புக்குப் போனான். அங்கே பல காரங்கள் வழங்கப்பட்டன. ஆனால் ஒன்று. காபி கிளப்புகளுக்கு எந்த எண்ணெய் வந்தாலும் அதற்கு நெய் யென்றுதான் பெயர். ரொம்ப நாளாக காபி கிளப்பில் நெய் போடுவதை நாட்டுப்புறங்களில் நிறுத்திவிட்டார்

கள். நல்லெண்ணை கடலை யெண்ணைகளாலேதான் நட வடி நடக்கும். ஆனால் சில கிளப்புகளிலே கடலை எண்ணெய் மண்டியில் செய்து விடுகிறார்கள். சில சம யங்களில் பித்தளைச் சட்டிகளில் அந்த மண்டி எண்ணை யிருந்து ஸ்ரீராமபிரானின் நிறத்தைப் பெற்றுக் கண் ணுக்குக் குளிர்ச்சியாகிவிடுகிறது. அந்த மோபிளாயி லில் தோசை முதலியன போட்டு விடுகிறார்கள். அதை நினைக்கும்போது என் குடலைப்புரட்டுகிறது. நான் சின் னப்பிள்ளையில் குடித்த பால்கூட வெளியே வந்துவிடும் போலிருக்கிறது. ஆனால் எனது நண்பருடைய அருமைக் குமாரன் இந்த எண்ணெயில் போட்ட பலகாரத்தை வாரி விழுங்கியிட்டு வீட்டுக்கு வந்துவிட்டான். அன்றிரவு மப்புண்டாகிக் காய்ச்சல் வந்துவிட்டது. உஷ்ணம் தாறுமாறாக உண்டானால் பேச்சு மாறிப்போகும். பயல் வாயிலே வந்ததெல்லாம் பேச ஆரம்பித்து விட்டான். இந்த சங்கதி தற்காலத்தில் சிலருக்குத்தான் விளங்கு கிறது. வீட்டில் சர்வாதிகாரம் பெற்ற தாயார் வந்து சேர்ந்தாள். மகனைப் பார்த்தாள். பொறுக்க முடிய வில்லை. கண்ணீரைத் தாரை தாரையாக விட்டழுதாள். பயலோ வசவில் முழுவாங்கு வாங்குகிறான். இந்த வியா தியின் மூலகாரணத்தைத் தாயாரொருவாறு உணர்ந்து விட்டாற்போலக் காட்டிக்கொண்டாள். என்றாலும் பையனுடைய பெரிய மாமியாருக்கு ஆள்விட்டார்கள். அந்தப் புண்ணியவதியும் வந்தாள். இரவு ௪-மணி யிருக்கலாம். வந்தவுடனே அவள்பேரில் சன்னதம் வந்துவிட்டது. அந்த அம்மாளுடைய சரீரம் சுமாராக ஆவுடையார் கோவிலிலுள்ள ஆவுடையாரைப் போன்ற

தாதலால் அங்கே யிருந்தவர்களால் கட்டிப்பிடிக்க முடியவில்லை. ஆதலால் ஆட்டம் பெரிய தடபுடலாகி விட்டது. இதற்குள்ளாக அடுத்த அண்டைவீட்டுப் பெண்களும் வந்து கலந்து கொண்டார்கள். ஆடிய சாமி "அடியே! உனக்கென்ன அவ்வளவு கொழுப்பு. இந்தப் பிள்ளையை ஒருகை பாராமல் விடுவேனு? பார் என் சேதியை." என்று உருமியது. பெண்களெல் லாரும் "தாயே! நீயாராத்தா? போயிராதே. சொல்லு. சொல்லிவிட்டுப்போ!" என்று பதறிக் கதறினர்கள். "நான்தாண்டி! கொம்பேறிக்காளி நான் தொட்டு இன்று முப்பது நாளாச்சு. ஒவ்வொரு நாளும் நான் தடுத்தது தெரியலியே! கேளு அவளை? பத்துநாளைக்கு முந்தி இலைப்படியில் காலைத்தட்டி விட்டேன். எட்டுநாளைக்கு முந்தி பருப்பைத் தடுமாறிக் கொட்டப்பண்ணினேன். வீட்டுப் பசுமாட்டுக்குக் கண்ணு தெரியாமல் ஒருநாள் முழுமையும் பண்ணிக் காட்டினேன்! நேற்றுக்கூட ஈயச்சொம்பிலிருந்த மோரைப் புளிக்கவைத்தேன். மாட் டிலே பாலைக்குறைத்து ஒருநாள் காட்டினேன். இவ்வள வுக்கும் இவள் அசையவேயில்லை. விட்டேனு பார்?" என்று பெரும் ஆட்டமாக ஆடினுள். வந்திருந்தவர் களில் ஒரு பெரியஆச்சி கையைப் பார்த்தார்கள். தன் கையைப் பையன் கையில் வைத்தாளோ இல்லையோ "பூதநாடி போடுகிறது. சாமி குறைதான் இது. கண் ணைப்பார்த்தாலே தெரியவில்லையா? சாமி குறைக்குப் பார்க்கிறவர்களிடத்தில் நல்லாப்பாருங்கள்" என்று திரு வாய் மலர்ந்தாள். அங்கிருந்த மற்ருெருத்தி சோசியம் பார்த்தாள். இது நல்ல சாமிகுறை யென்ருள். யார்

பார்க்கிறது தெளிவென்று எல்லாரும் கூடி ஆலோசித்தார்கள். வயலூர் ராக்கன் என்ற பள்ளன் கோடங்கி பார்ப்பதிலே ரெம்பக் கியாதிபெற்றவனுதலால் விடியற்காலம் அங்கே போவதென்று தீர்மானித்தார்கள். விடியுமுன் எழுந்து புருஷனையும் வரும்படி கூப்பிட்டார்கள். அவருக்குக் கோடங்கியில் கொஞ்சங்கூட நம்பிக்கையில்லை. நானெதற்கு! நீங்கள் போய் வாருங்கள் என்றார். அவரது மனைவியார் கிளம்பிவிட்டாள். பிள்ளை சாகக்கிடக்கிறது. அவுகளுக்கென்ன? என்று சண்டைக்கு ஆரம்பித்தாள். எனது நண்பர் உலகத் தூற்றுதலுக்கு மிகமிகப் பயப்படுவார். வாய்பேசாது புறப்பட்டார். வயலூருக்கு ரு-மணிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். பள்ளனைக் கண்டார்கள். வயிரமோதிரமும் கும்பகோணம் சலவை வேட்டியும் காலிலே பெரிய மிதியடியும் போட்டுக் கொண்டிருந்த எனது நண்பரைக் கண்டவுடனே அவன் கொஞ்சம் தளுக்குப்பண்ணினுன். என்றாலும் சூ - மணிக்கெல்லாம் சாமி கும்பிட்டு உடுக்கையெடுத்தான் கையிலே! உய் உய்! உய் உய்! என்று அடித்தான். வரவரப் பலமாக அடித்தான். "மொண்டிக்கறுப்பா முழுக்கறுப்பா நீ வாடா! காளியம்மா நீ வாராய் கண்ணம்மா நீ வாராய்! என்று வெகு நேரம் சாமிகளை வேண்டினுன். அதோடு மெதுவாக "கொஞ்ச வயதிருக்கும் கொம்பனையாள் தன் மேலே" என்றுன். அதற்குள்ளாக பையனின் தாயார் முகத்தைச் சுளித்தாள். பக்கத்திலே யிருந்த கோடாங்கிப் பண்டிதை "இப்படித்தான் வரும் பின்னுலே எல்லாம் சரியாக வந்துவிடும்" என்று சொன்னுள். கோடங்கி இனி விடு

வானு? அடித்தான் உடுக்கை முழு அடியாக. "கொஞ்ச வயதிருக்கும் கொம்பனையாள் தன் வயிற்றில், வந்துதித்த சீராளன் வழியே வரும்பொழுது" உய் உய்! உய் உய்! என்று அடித்தான் பலமாக. பெண்களின் முகம் மலர்ந்துவிட்டது. "பிடித்ததடா பொல்லாத பெரிய வொரு காளியம்மா! காளிக்குப் பூசை கனமாகப் போடவேணும் வீதிவழி வந்தான் வேணுமென்று பார்க்கவில்லை. வேங்கை மாமிருந்த வீரான காளியம்மா. காளியம்மா முன்னாலே காளை வரும்போது. பச்சோந்தியொன்று பதறியே போனதுண்டு. கண்டுபயந்ததுண்டு. கறுப்பன்தொடர்ந்ததுண்டு. பேச்சி தொடர்ந்துவிட்டாள் பின்னையொன்றுமில்லையம்மா!" என்று படு அடியாக அடித்து உடுக்கைக் கிழித்துவிட்டான். என்ன சொன்னனென்பது எனது நண்பருக்கும் அவர் மனைவிக்கும் ஒன்றும் விளங்கவில்லை. ஆனாலும் கூடவந்த கோடங்கிப் பண்டிதையம்மா கோடங்கி சொன்ன வார்த்தைகளுக்குப் பெரிய விருத்தியுரை விசேடவுரை யெல்லாம் சொன்னாள். "பயல் வீதியிலே வந்தான். வேங்கைமரத்தடியில் பச்சோந்தி குறுக்கே போனது. அதைக்கண்டு பயந்தான். அந்த மரத்திலே யிருந்த சின்னக்காளி பிடித்துக்கொண்டாள். அவள் ஆலயத்திலிருக்கிற கறுப்பனும் பேச்சியாத்தாளும் கூடத் தொடர்ந்திருக்கிறார்கள். இது ரொம்ப நாளானபடியால் பெரிய காளியாத்தாளும் சேர்ந்துவிட்டாள்" என்பது அதன் பொழிப்புரையாகும். இதற்கென்ன செய்கிறதென்று கேட்டார்கள். "உடுக்கு அறுந்து போனபடியால் இன்னொரு நாளைக்குத்தான் பார்க்கவேண்டும். ஆனால் இப்போது அந்தக்

தேவதைகளைக்கட்டி விபூதி தருகிறேனென்று சொல்லி விபூதி கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு வந்தார்கள். இந்த சங்கதியில் எனது நண்பருடைய மனம் புளித்துப் போய்விட்டது. இப்படியான மூட ஜனங்களுடனிருப்பதைவிட காவிவேட்டி தரித்துக்கொள்ளுவது நலமென்று கருதினர். முடிகிறதா? கஷ்டப்பட்டுக்கொண்டு வீடு வந்து சேர்ந்தார். பிள்ளை பாயும் படுக்கையுமாக இருக்கிறான். ஊரிலேயுள்ள பெண்களெல்லாரும் வந்து கூடிவிட்டார்கள்.



## பையன் செத்தே தீர்ந்தான்

காலை எ-மணியிருக்கும். எனது நண்பர் வீட்டில் சுமார் இருநூறுக் கதிகமான பெண்கள் நிறைந்துவிட் டார்கள். அந்தப் பெரிய கூட்டத்தில் லக்ஷ்மிதேவி யின் கட்சிக்காரர் அதிகமில்லை. சாஸ்வதி தேவியின் கட்சி (வெள்ளைப் புடவை) ஆள்கள்தான் அதிகம்! எங்கே யார் வியாதிப்பட்டார்களென்பதையும் அவர் களுக்குச் செய்த சிகிச்சை முறைகளையும் தங்கள் தங் களுக்குத் தெரிந்தவரை ஒவ்வொருவரும் சொல்ல முயன் ருர்கள். திடீரென்று நின்ற நிலையில் ஒரு வயதான பெண் பேரில் சன்னதம் வந்துவிட்டது. "அடியே! என்னைத் தெரியுமா? உன் கொழுந்தனுர் பெண்டிரை நீ திட்டியதுக்காக அவள் சண்டிக்காளி ஆலயத்திலே போய் அடித்து விழுந்திருக்கிருள். மனவெந்திப்பா யிருக்கிருள். அதுக்கு வழி பண்ணு. நாளை விடியற் காலம் பயல் எழுந்துவிடுவான்" என்று ஆடினுள். பக் கத்திலிருந்த பெண்களில் ஒருத்தி நிசந்தானே; அவ ளுக்கு வருத்தமாயிருக்காதா? என்னிடத்திலே கூட ஆத்திரம் ஆத்திரமாகச் சொன்னுள் என்ருள். வேருெ ருத்தி எப்படியிருந்தாலும் இந்த முறை நமக்குத் தெரியா தாத்தா. அதுக்காகக் கோயில் குளமென்ருு போகிறது என்ருள். பலர் பல மாதிரியாகச் சொன்னுர்கள். என்ரு லும் முடிவாக கொழுந்தனுர் பெண்டிருக்கு ஆளனுப்பி ஞர்கள். அவள் தாயார் வீட்டிலிருந்து பெரிய பெரிய சிபார்ஸின் மேல் வந்து சேர்ந்தாள். பழய கணக்கு களுக்கு வட்டி போட்டு ரூபா ஐபாயிரத்திச் சொச்சத்

திற்கு நோட்டாக எண்ணிக்கொடுத்து அவள் கையாலே விபூதி வாங்கிப் பையனுக்குப் பூசினூர்கள். பையன் படுத்தபடியேதான் கிடக்கிருன். கொழுந்தனூர் பெண்டி ரானவள் "நம்மள் வீட்டுச் சாமிக்குப் படைத்து மூன்று வருஷமாகிவிட்டதே! பெரிய படைப்பு ஒன்று படைக் கிறேமென்று சொல்லிக்கொள்ளுங்கள் என்று சொன் ஞள். அதுவும் நடந்தது. இந்த சமயத்தில் கோடங் கிப்பண்டிதையாச்சி வந்து கோடங்கி பார்த்த வள்ளுவ ருக்கு என்னவாவது ரூபா கொடுத்தால் தானே பூசை போட்டுக் கட்டிவைப்பான் என்ருள். அதற்கு ரூபாய் நூறு கொடுத்தார்கள். எனது நண்பர் நல்லவர். அப் பாவி என்று பேர் வாங்கியிருந்தபடியால் அவ்வூரில் அநேகம் பேர் சிநேகிதர்களாக விருந்தார்கள். அவர் களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுள் ஒருவர் இது ஏதோ வியாதிக்கோளாறுதான்; நல்ல வைத்தியராகப் பார்த்துக் கூட்டிவந்தால் நலமென்று சொன்னூர். அவ் வூரில் இங்கிலீஷ் வைத்தியம் செய்துகொண்டிருந்த டாக்டர் சுந்தரமய்யர் நல்ல பேர் பெற்றிருந்தபடியால் அவருக்கு ஆளனுப்பி வரவழைத்தார்கள். டாக்டர் வந் தார். கையைப் பார்த்தார். அஜீர்ணத்திலிருந்து காய்ச்ச லுண்டாகி உட்காய்ச்சலாயிருந்து இப்போது தோஷம் சம்பந்தப்பட்டிருக்கிறது என்று சொல்லி, நல்ல மருந் தொன்றைக் கொடுத்துவிட்டு மீதி மருந்தை மணிக் கொருதரம் கொடுக்கும்படி சொன்னூர். இதற்கிடையில் இரண்டு முட்டி வெற்றிலேயும், ஒரு மூட்டை பாக்கும், நாலு கத்தை சிவபுரிப் புகையிலேயும் வந்து சேர்ந்தன. படிக்கம் ஐந்தாறு வைக்கப்பட்டது. பெண்களும் புரு

ஷர்களும் வெற்றிலையை மங்களகாமாகப் போட்டுக் கொண்டு கும்மாளமடிக்கிறர்கள். வெளியூருக்கும் தாக் கல் கொடுத்திருந்தபடியால் ஆங்காங்கேயுள்ள சொந்தக் காரரும் வந்துகொண்டே யிருந்தார்கள். ஆனல் பைய னுக்கு மாமியார் இந்தத் தகவல் கேட்டவுடனே அவர் கள் ஊரில் நாட்டு வைத்தியத்தில் பேர் பெற்ற ஒரு வரைக் கூட்டிவந்தார். அவனொரு சுத்தமுரடன்! வாக்கு போக்கு சமயம் சந்தர்ப்பம் ஒன்றும் அவனுக்கு விளங் காது. படிப்புங்கிடையாது. சாந்தகுணமுங் கிடையாது. பட்டிக்காட்டுப் பேர்வழி. அவனைக் கொண்டுவந்து விட் டுக் கையைப் பாருங்கள்! என்று அந்த அம்மா சொன் னர்கள். பார்த்தான். "ரொம்ப மிஞ்சிப்போச்சு; சுக ஜன்னி; அதுக்குவேண்டிய காரியத்தைப் பாருங்கள். ரொம்பத் தட்டுக்கெட்ட வியாதி." என்றன். பக்கத் திலே சூழ்ந்திருந்த பெண்களெல்லோரும் "ஐயோ! தங் கங்கிடக்கிற கிடையைப் பாருங்கள்! வைத்தியரையா நன்றகப்பாருங்கள்! அந்தப் பெண்ணைப் பார்க்கையிலே பாவமாயிருக்கிறது; வெங்களுரான் பட்டை உடுத்திக் கொண்டு வயிரநகையைப் போட்டுக்கொண்டு கலியாணக் காரர் வீட்டிலிருந்து வந்தால் அழகு சிந்துமே! ஐயோ! ஈசன் எப்படி பெழுதியிருக்கிறனே" என்று பரிதாபப் பட்டார்கள். வைத்தியன் பேசாமல் ஒரு ஓதுக்கிடம் பார்த்து உட்கார்ந்துவிட்டான். அங்கிருந்த நண்பர் சிலர் தனித்து அவனைக் கண்டு பேசினர்கள். அவன் கேட் பான? "அந்த அம்மா கூப்பிட்டார்களே என்று வந் தேன். காசு எனக்குத் துரும்புக்குச் சமானம். என் அதெல்லாம் பேச வேண்டும். ஐயா பணக்காரர். பிள்ளை

ஒரே பிள்ளை. இதற்கில்லாத பணம் வேறெதற்கு! இப்போது முன்னாலே ஐநூறு ரூபா தாவேணும். சௌக்கிய மான பிறகு ஐநூறு தாவேணும். மற்றது அவர்களிஷ்டம்!'' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டான். எனது நண்பரும் மற்றவருமாக யோஜித்தார்கள். இதை வேண்டாமென்று சொல்லிவிடத்தான் அவர்களுக்கு இஷ்டம். ஆனால் பையனுக்கு ஒருவாறு வேறு விதமாக ஆனால் இந்தப் பெண்களின் தூற்றுதலுக்கு ஆளாகவேண்டுமே! உலகத்தார் பணத்தைக் கட்டிக்கொண்டழுதானென்று சொல்லுவார்களே! என்று யோஜித்து யோஜித்துக் கடைசியில் சம்மதித்துவிட்டார்கள். இப்படியே தான் எனது நண்பர் ஒவ்வொன்றுக்கும் சம்மதித்தார். டாக்டர் சுப்பிரமணிய ஐயரைத் தவிர மற்றெல்லாம் அவருக்குப் பிடிக்கவில்லை. அதற்குக் காரணம் அவருக்குத் தைரியமில்லை. சாது. பயந்தவர். பிறகு தடி வைத்தியன் நூற்றுக் கணக்கான வேர் வகையும் கணக்கற்ற கடைச் சரக்கும் கொண்டுவரச் செய்து கஷாயம் போட்டு இறக்கி சுக ஜன்னிக்கு மருந்து தயார்ப் பண்ணினான். அந்தப் படுபாவி வைத்தியன் அப்போது பையனுக்கு வயது பதின்மூன்றுதானென்று பலர் சொன்னதையும் காதிற் போட்டுக்கொள்ளவில்லை. உடனே அந்தப் பெண்ணின் உடம்பில் கொஞ்சம் ரத்தம் பிழிந்துகொண்டு வரச் சொன்னான். அந்தப் பெண் "இந்த இழவெல்லாம் என்னத்திற்கு; வேறே நல்ல மருந்தாகக் கொடுக்கப் படாதா!'' என்று சலிப்பாகவும் குறிப்பாகவும் சொன்னாள். அதையும் இந்தத் தடியன் கவனிக்கவில்லை. கஷாயத்திற் கலந்து ஒரு போகணி வைத்துப் புகட்டினான்.

இது உள்ளே போனவுடனே கொஞ்சநேரமாகப் படுத்திருந்த பையன் எழுந்து வாயில் வந்ததெல்லாம் சொல்லிப் புலம்பிக்கொண்டு ஆடிக் குதிக்க ஆரம்பித்துவிட்டான். நமது எருமைக்கடா வைத்தியன் பயப்படுவானு? கொண்டுவா பிள்ளைப்பாலும் தேனும் என்ருன். இரண்டிலும் தனித்தனி இரண்டு கட்டிகளை உறைத்துக் கொடுத்தான். பகல் ஒரு மணியாகிவிட்டது. சாப்பாட்டுக்கு ஒவ்வொருவராகப் போய் சாப்பிட்டுவிட்டு வந்து சேர்ந்தார்கள். சில நண்பர்கள் ஜாதகத்தை பார்க்கலாம். கண்ணுக்குட்டி ஜோஸ்யர் நன்ருகப் பார்ப்பார். புழுகு பூனைச் சுப்பிரமணியன் கனபாடிகளும் தெளிவான ஆள் தான். அப்புக்குட்டி தீக்ஷிதர் பிள்ளை சுப்பராமன் இருக்கிருனே! நம்மோடு பள்ளிக்கூடத்திற் படிக்கும்போது "மக்குச் சுப்பராமன்" என்று பேர் வைக்கவில்லையா. அவன் சுத்த மக்காகத்தானிருந்தான். நாலு மாதமாகத் தெளிவாக சோசியம் பார்க்கிருன். அவனுங் குற்றமில்லை. அநேகம் பேருக்கும் பார்த்துப் பலனுண்டாயிருக்கிறது என்று சொன்னுர்கள். சரியென்று ஜோசியர்கள் அழைத்து வரப்பட்டார்கள். அவர்கள் ஜோசியம் பார்த்த பெருமை சொன்னுல் பத்து நாள் செல்லும். சோற்று ராமண்ணுக்கள், பிழைக்க வேறு வழி தெரியாமல் சோசியத்தொழில் செய்யும் சுத்த மூட சிகாமணிகளான அவர்கள் ஏதேதோ தோன்றியதெல்லாம் பேசி முடிவாகப் பரிகார ஓலை யெழுதி முடித்தார்கள். அதன்படி எல்லாக்கோவில்களுக்கும் அபிஷேக ஆராதனை நடந்தன. சோசியர்களையும் சேர்த்து இருபது பேர் உட்காரவைத்து ஜபம் நடக்கிறது. இந்த ஜபம், ஜோஸ்

யம், ஜாதகம் பார்ப்பவர்களைப் பற்றி மற்றொரு முறை அவிழ்க்கிறேன். இப்போது பையனுக்குத் தடபுடலா யிருக்கிற சமயத்தில் வேண்டாம்.

இப்படிப் பல வழியில் பார்த்தும் வாவர கைமேலே போய்க் கொண்டிருந்தது. அவ்வூரிலிருந்த மலையாளி யொருவனை எனது நண்பரது பழய முதலாளி மகன் கூட்டி வந்து பார்க்கச் சொன்னர். "பிள்ளே கண்ணே பார்க்கலே வெள்த்துப்போச்சு; ப்சாசி ப்டிச்சிர்க்கு. நல்லா பார்க்கணும். தெரியிலே" என்று என்னென்னவோ உள றிக் கொட்டினன். கடைசியாகப் புலவர்களெல்லாங் கூடி பிசாசுக்கோளாறிருக்கிறது. தோட்டத்தில் பில்லி சூனி யம் வைக்கப்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொண் டார்கள். அதற்காக மந்திரம் வேறே நடக்கிறது. அவ னுக்கு ரூபா இருநூறு கொடுத்தாய்விட்டது. இரவு மணி ஏழு இருக்கலாம். கொலேகார வைத்தியன் கடு மையான மருந்தொன்றை உறைத்து உள்ளே கொடுத் தான். அதை உண்டு கொஞ்ச நேரத்தில் பேசாமல் பையன் படுத்து விட்டான். இதைக்கண்ட வைத்தியன் வாயிலே வெற்றிலேயையும் ஒரு முழுப் புகையிலேயையும் அமுக்கிக்கொண்டு அட்டகாசம் பண்ண ஆரம்பித்து விட்டான். இந்த மருந்தைக் கொடுக்காமலே சௌகர்யம் பண்ணி விடலாமென்று பார்த்தேன்......பயல்விட்டு வியாதி வழிக்கு வரமாட்டேனென்று விட்டது. இதை யெப்போதும் கடைசிக் கையிருப்பாக வைத்துக்கொள் வது வழக்கம். இந்த மருந்து என் பாட்டனருக்கு போக முனிவர் கடாக்ஷத்தினலே கிடைத்தது என்று என்னவோ பழய பெருமைகளைச் சொல்லிப் புலம்பிக்

கொண்டிருந்தான். பத்து மணி சுமாருக்குப் பையன் அசைவற்றுக் கிடந்தான். எனது நண்பர் பார்த்துச் சந்தேகப்பட்டு அந்த மாட்டுவைத்தியனை யென்ன சேதி யென்றார். பையன் அசந்து தூங்குகிறான். தொந்தரவு பண்ணவேண்டாம் என்று அதட்டினான். இவர் நம்ப வில்லை. வைத்யனும் படுத்துத் தூங்கிவிட்டான். இவர் வெளியே சென்று டாக்டரைக் கூட்டி வந்து கையைப் பார்க்கச் சொன்னார். அவர் வரவே மறுத்தாலும் இரக் கப்பட்டவர். மேலும் எனது நண்பரிடத்து அன்பு கொண்டவர். ஆதலால் வந்து பார்த்து, பச்சை வெட்டு மருந்தைக் கொடுத்துவிட்டான் பாவி. வாய் வயிறெல் லாம் வெந்திருக்கிறது. இனித் தேறாது. நான் என்ன செய்யலாம். வாயிலே துர்நாற்ற முண்டாகிவிட்டது. இரவு இரண்டு மணிக்கு அடங்கிப்போகும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். இப்போது எனது நண்பர் கண்ணீரைத் தாரை தாரையாக விட்டார். அழு தார். கடவுளைத் தொழுதார். விதியை நொந்தார். இந்த ஜாதியையும் பெண்களின் முட்டாள் தனத்தையும் வாயா ரத் திட்டினார். வைத்யனை இப்போதே கொன்றுவிடுவது புண்ணியமென்று கருதி யெழுந்தார். ஆனால் காலையில் போலீசார் வந்துவிடுவார்களே! நமக்குக் கெட்ட பேர் வருமே என்று உட்கார்ந்தார். புலம்பினார். கதறினார். கடைசியாகத் தெளிந்து பையனது தலைமாட்டிலிருந்து "அப்பா! கண்ணே! ஒரு வார்த்தை பேசடா!" என் றார். அவன் நாக்கை நீட்டினான். அது சுத்த வெண்மை யாகவிருந்தது. இனி யென்ன செய்வதென்று தோன்றா மல் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தார். பிறகு தெளிந்து

“சிவ சிவ. ராமராம. கிருஷ்ணு. முருகா. கோவிந்தா” என்று இறைவன் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார். பையனின் நெற்றி நிறைய விபூதியைப் பூசினுர். சரியாக இரண்டரை மணிக்குப் பையன் இறந்து போனுன். வைத்தியனைக் கொஞ்சம் திட்டலாமென்று அவன் படுத்திருந்த விடத்தில் பலர் சென்று பார்த்தார்கள். அவனைக் காணவில்லை. அவன் ஓடிப்போய் விட்டான்.



## கலியாணமா? சந்யாசமா?

விடியு முன்னுலேயே பிராமணர் பலரும் வந்துவிட்டனர். அடடா. தானம் பண்ணவில்லையே. என்ன சேதி. செய்யவேண்டாமா என்றனர். எனது நண்பர் செய்யத்தான் வேண்டும் ஆனல் அடங்கிப் போய்விட்டதே என்ருர். அதனுல் என்ன இறந்து ஐந்து நாழிகை வரை செய்யலாமென்று சாஸ்திரஞ் சொல்கிறது என்ருர் ஐயர். என்ருலும் இறந்த பிறகு செய்வதைக் காட்டிலும் சபிண்டியில் விசேஷமாக நடத்துவது நலமென்று கூறினர். பிறகு ஐயர் அடாடா ஒரே பிள்ளை. பால்யத்திலே போய்விட்டது. இனியாவது நல்ல வழி கிடைப்பதற்குப் பிராமணருக்கு நன்ருகச் செய்யுங்கள் என்று சொன்னர். உடனே ஒரு தஞ்சாவூர் பசுமாடு வாங்கி வரப்பட்டது. அதை ஒரு வங்குவற்றி ஐயர் கையில் கொடுக்கப்பட்டது. அந்த மாட்டிற் பாதி ஐயருக்கு. பாதி பஞ்சாங்கக்காரருக்கென்று பின்னுலே தெரிந்து எனது நண்பர் மிக வருந்தினர். பிறகு பூரி. ஒன்றும் அரையும் கொடுக்க ஏற்பாடு செய்தார். காலை ௫-மணியிருக்கலாம். ஊர்ப்பெண்களில் ஒருவரும் பாக்கியில்லை. யாவரும் வந்து, வீட்டிற்குச் சொந்தக்காரப் பெண்கள் என்ன செய்கிருர்கள் என்பதைக் கூர்மையாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அங்கு அழுதவர்களில் முக்கியமானவள் பையனுக்கு வாழ்க்கைப்பட்டவள்தானே அந்தப் பெண்ணின் நிலைமை பரிதாபமாகத்தானிருந்தது. அந்தப் பெண் புருஷன் செத்துப்போனனே என்று அவ்வளவாக அழவில்லை. அவனேடு கூடி இன்ப

வாழ்க்கை வாழ்ந்ததை நினைத்தா அழுதாள்? இல்லை. அதற்குத்தான் சந்தர்ப்பமில்லையே! வேறு அவன் தேடி வந்ததைச் செலவழித்து வாழ்ந்ததற்காகவா? இல்லை. தனது பிற்கால வாழ்க்கைக்குத் துன்பம் வந்துவிட்டதே யென்றா? அல்ல. உலகத்துக்குப் பெரிய உபகாரி இறந்து போனானே யென்றா? இல்லை. வேறெதற்காக அழுதாள்? இன்னுங் கொஞ்ச நேரத்தில் தான் கட்டியிருக்கிற பட்டு, நகை முதலிய யாவற்றையும் அலற அலறத் துடிக்கத் துடிக்கச் சுற்றியிருப்பவர்கள் பிடுங்கிக்கொள்வார்களே! நம்முடைய காது மூக்கெல்லாம் சலாத்திமாதிரி துவாரந் துவாரமாயிருக்க, வெறுமே கிடக்கவேண்டுமே! மஞ்சள் பூசக்கூடாதென்பார்களே! நொண்டிப் பிணம்போல வீட்டினுள்ளேயே கிடக்கவேண்டுமே? தேருக்கும் திருவிழாவிற்கும் விசேடக்காரர் வீட்டுக்கும் போகமுடியாதே! ஊரிலுள்ள ஆண் பெண் அனைவருங்கூடி பகிரங்கமாக உட்கார வைத்துத் தாலியை அறுப்பார்களே! கழிபட்ட வெள்ளைத்துணியைக் கட்டவேணுமே! வீதியில் வந்தால் பாவிமக்கள் சகுனத்தடையென்று திட்டுவார்களே! இந்த விதி யெனக்கு வந்ததே! இன்னும் ஒரு சுகத்தையும் நான் அனுபவிக்கவில்லையே! எனக்கு இந்த விதி வருமா? என்று கண்ணீர் தாரை தாரையாகக் கொட்டப் புரண்டு புரண்டு அழுதாள். இதைக்கண்ட பல இரக்கமுள்ளவர்களும் அழுதார்கள். பெண்ணென்றால் பேயுமிரங்குமல்லவா? துக்கம் விசாரிக்க வந்தவர்கள் கூட பையனைப்பற்றி அதிகமாகச் சொல்லவில்லை. "பெண் பாவம் பறிபட்டுப் போச்சையா" என்று தான் சொன்னார்கள். இப்படி அந்த வீடு முழுமையும் அழுகைக்

குராலும் துக்கம் நிறைந்த முகமுமாகவே யிருந்தது. ஆனால் பெண்ணைச் சேர்ந்த சில ஆண்மக்களும் வந்திருந் தார்கள். அவர்கள் ஏதோ கணக்குகளைப் பார்த்து வட் டிச் சிட்டை போட்டார்கள். அவர்கள் காலை ஏழு மணிக்கு வேலை யாரம்பித்து பகல் பதினொரு மணிக்கு ஒரு முடிவுக்கு வந்தார்கள். உடனே ப்பயனின் தகப்ப னார் இருபதாயிரம் ரூபாய்க்கு உண்டியலெழுதிக் கொடுத்து இரண்டு பெரிய மனிதரையும் ஜாமீன் சொல் லிக்கொள்ளும்படி செய்தார். இந்தத் தொகை அந்தப் பெண்ணுக்கு ஸ்ரீதனம் கொடுத்த தொகையாகும். அந் தப்பெண் சம்பந்தமான சகல சாமான்களையும் பொருக்கி ஒரு வீட்டினுள் போட்டுப் பூட்டிக்கொண்டார்கள். இதன் பிறகு பலரிருந்து பேசினார்கள். பணங்கொடுத் தாய்விட்டது. சாமான் பொருக்கியாய்விட்டது. பிணம் வெளியே போகலாமல்லவா? நடக்கவில்லை. அந்தப் பெண்ணுக்குப் பிள்ளை கூட்டவேண்டுமென்று பெருந்தக ரால் வந்துவிட்டது. பையனின் தாயார் தன் பிள்ளை யிறந்துவிட்டபடியால் தனக்குக் கூட்டவேண்டுமென்று கட்சி பிடித்தாள். பெண்ணின் தாயார் வந்து தன் மக ளுக்கே கூட்டவேண்டுமென்று கட்சி பிடித்தாள். இரு வரும் சரியான ஆள். சண்டை வலுத்துவிட்டது. எனது நண்பருக்குப் பிள்ளை கூட்டுவதே பிடிக்கவில்லை. பெற்ற பிள்ளையினாலேயே பெருங்கஷ்டப்பட்டுத் தவித்து விட்டபடியால் பிள்ளை சங்கதியில் அவர் மனம் வெறுப் படைந்து போய்விட்டது. என்றாலும் எப்படியாவது மரியாதையாகப் பிணத்தை வெளியேற்றவேண்டுமென்று கருதினார். பல பெரிய மனிதர்கள் வந்து சமாதானம்

பண்ணி, பையன் வீட்டுக்குப் பிள்ளை கூட்டி வைப்பதற்குப் பூராத் தொகையும் சம்பந்தப்புறத்தார் கொடுப்பதென்றும் எனது நண்பர் அந்தப் பிள்ளைக்கு முதலாக ஐம்பதாயிரம் ரூபா கொடுத்து விடுகிறதென்றும் தீர்த்து விட்டார்கள். இப்படி முடிய மணி மூன்றாகிவிட்டது. பிணமும் வெளியே போய்விட்டது. பதினைந்தா நாள் பிராமணக் கூட்டம் எச்சலிலைக்கு ஒரு பிராணி வாலைக் குழைத்துக்கொண்டு வருமே அதுபோல வந்து சூழ்ந்து விட்டனர். அத்தனை பேருக்கும் அடித்தழுது மூவாயிரம் ரூபா தொலைத்தனர்.

இந்தச் சனியனெல்லாம் ஒருவாறாகத் தொலைந்தன. எனது நண்பருக்கு வெறுப்புக்குணம் தலைகாட்டிவிட்டது. அவர் மனைவி அடிக்கடி தனக்குப் பிள்ளை கூட்ட வேண்டுமென்று தொந்தரவு செய்து வந்தாள். இவரும் ஆகட்டும் ஆகட்டுமென்றே காலங்கடத்திவந்தார். இவருக்கும் வயது ஐம்பது ஆகிவிட்டது. இவர் மனைவி சில மாதங்களுக்கு முன்னர் பரமபதமடைந்துவிட்டாள். இப்போது பல மேதாவிகள் வந்து எனது நண்பரை மறுதாரம் கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்கின்றனர். அவருக்கும் ஒரு இளம்பெண்டாட்டி கலியாணம் செய்ய ஆசைதான். ஆனால் வயதான பெண்டாட்டி ஆட்டி வைத்த ஆட்டம் அவர் மனதிலிருந்து பயமுறுத்துகிறது. கிழட்டு மாப்பிள்ளைகள் இளவட்டங்களைக் கலியாணம் பண்ணிப் படும் பாட்டையும் அவர் அறிந்திருக்கிறார். ஆதலால் சம்மதிக்கவில்லை. எனது நண்பர் என்னை யோசனை கேட்டார். கடைசி காலத்திலாவது என் யோசனைக்கு வந்

தாரே யென்று சந்தோஷப்பட்டேன். ஒருபக்காயோசனை சொன்னேன். "நண்பரே! இனிப் பெண்டாண்டி கட்டி னீரோ நாசந்தான். அவளுக்குச் சீலை துவைக்க வேண்டி யதுதான். அவளின் மழலைச் சொல்லுக்கும் உமது பெப்பெப்பேப் பேச்சுக்கும் ஒத்து வருமா? அவளுடைய சேலைக்கட்டுக்கும் கொண்டை முறுக்குக்கும் வழு வழுத்த உடம்புக்கும் மான்குட்டிபோன்ற கண்ணுக்கும் உமது அழுக்கு வேட்டியும் கண்ணாடி மண்டையும் சுருங்கல் விழுந்த உடம்பும் பீளைவடிந்த கண்ணும் போட்டிபோட முடியுமா? உம்மிடத்திலே சிறு பெண் கள் மதிப்புக்கொண்டு நடப்பார்களா? நீர் தான் அவர் களைத் திருப்திப்படுத்த முடியுமா? ஏனையா சாகப் போகிற காலத்தில் கெட்டபேரை வாங்கித்தா அவமானத் துக்குள்ளாகிறீர்? கடைசி காலத்திலாவது சுகமாயிருந்து நல்ல வழியில் போகக்கூடாதா என்றேன். அவர் "இவ் வளவு பணத்தையும் என்ன செய்கிறது. ஒரு பிள்ளை கூட இல்லையே" யென்று கண்ணீர்விட்டார். பிள்ளை கூட்டினால் தேவடியாள் வீட்டிற் கொடுப்பான். உமக் குப் பாவந்தான் வரும் என்று கூறி, பச்சையப்ப முதலி யார் பெரிய கோடீசுவரனாயிருந்ததும் அவருக்குப் பிள்ளையில்லாமலிருந்தும் பிள்ளைகூட்ட நிலைக்காமல் தரு மஞ் செய்த விதத்தையும் சொன்னேன். அவர் மனம் கொஞ்சம் திரும்பியது. அதைக்கண்டு "ஐயா! நீங் கள் படிப்பில்லாத பெண்களாலேயே பெருந்துன்ப மடைந்திருக்கிறீர்கள்; இதனால்தான் நம்முடைய பெரு மையெல்லாம் அழிகின்றன வாதலால் உங்கள் பணத்தை யெல்லாம் போட்டு ஒரு பெரிய பெண்பாட சாலையும்

பையன்களைத் திருத்த ஒரு நல்ல கல்விச்சாலையும் வைத்து நடத்துவதோடு ஒரு தேவார பாடசாலையும் வைத்தால்போதுமானது" என்று யோசனை சொன்னேன். செய்யலாமென்று சொல்லியிருக்கிறார். இன்னும் எந்தப் புண்ணியவான் சேர்ந்து என்ன சொல்லுவானோ ? தெரியவில்லை. கலியாணஞ் செய்கிறேன் என்று பெண் வைத்திருப்பவர் சிபார்சு செய்கிறார்களென்று சில நாகர்கள் சொல்லுகிறார்கள். அதைப் பொய்யென்று சொல்லவும் முடியவில்லை. குழியை வெட்டிக்கொண்டு "உன் பெண்ணைத்தள்ளு ரூபா ஐம்பதினாயிரத்துக்கு வழி பண்ணுகிறேன்" என்றால் தள்ளிவிடப் பலர் தயாராயிருக்கிறார்கள். உள்ளே மோட்டாரிருக்கிறதா வயிரநகையிருக்கிறதா என்று கலியாணப்பெண் பார்க்கிறாளேயன்றிப் படுகுழியல்லவாவென்று கவனிக்கவில்லை. இவைகள் ஒழுங்குபடும்நா ளெந்நாளோ? பரமசிவனே ! உனக்குத்தான் தெரியும்! எனது நண்பர் கலியாணமா சன்யாசமாவென்ற பரீக்ஷையில் அகப்பட்டிருக்கிறார். எதில் தேறுவாரோ ? யாருக்குத் தெரியும் ?



# மணிபர்ஸ் தாத்தா

## I

நான் வசிக்கிற ஊரில் "மணிபர்ஸ் தாத்தா" என்றொருவரிருக்கிறார். இவருக்கு வயது ௫0-க்கு மேலாகி விட்டது. ௪0-வயதிலேயே பல் முழுமையும் விழுந்து போய் விட்டபடியால் பள்ளிப்பிள்ளைகள் "மணிபர்ஸ் தாத்தா" என்று பெயர் வைத்துவிட்டனர். மணிபர்ஸ் என்றால் தோல்பை என்று பொருள். இந்தத் தாத்தா பணக்காரர். இவர் மனைவி சில மாதங்கட்கு முன் இறந்துபோய் விட்டார். புதுப்பெண் கல்யாணம் செய்து இளவட்டங் கொண்டாட ஆசை வந்துவிட்டது. பெண் பார்த்தார். பேசி முடித்தார். பெண்ணும் கலியாணஞ் செய்த சில மாதங்களில் சஷ்டி பூர்த்தியும் செய்து கொண்டு விடலாமென்று சம்மதித்துவிட்டது. பெண்ணைப் பெற்றவரும் கொழுத்தபணங் கிடைப்பதால் உடன்பட்டு விட்டார். தாத்தா வாயை மென்றுகொண்டு குதிரையில் வரும்போது பல இளைஞர்களும் இளம் பெண்களும் பார்த்துக் கேலி பண்ணினதே ஒரு காட்சியாயிருந்தது. ஆனால், தாத்தாவின் ஆசை வெட்கமறிகிறதா? கல்யாணமும் ஆகிவிட்டது.

மணிபர்ஸ் தாத்தாவை அவசரத்தில் சந்தித்தேன். நரைத்த உரோமங்களும், சுரித்துத் திரைந்த முகமும், மணிபர்ஸ் வாயும், பழைய மாதிரியா யிருந்தாலும் முகம் மிகச் செழிப்பாக இருந்தது. என்ன தாத்தா ௫௭-வது வயதிலுங்கூட வேட்டாத்து சாப்பாடு முறுக் கேறுகிறதே என்றேன், சிரித்துக்கொண்டு மௌனமா

யிருந்தார். "கல்யாணமெப்படி" என்று கேட்டேன். "என்னவோ பணத்தைச் சம்பாதித்தோம். எப்பொழு தாவது இறப்பது நிச்சயம். நம்மைவிட்டுப் பணம் நீங்குவது நின்னம். இந்தப் பெண்ணும் குற்றமில்லை. செத்தவன்று அழுவதற்காவது பெண்டாட்டி வேண்டா மா? பெரிய குடும்பம். இதுவரை பேருரைக் காப்பாற் றிக் கொண்டிருந்துவிட்டோம். இதை யெல்லாம் உத் தேசித்துத்தான் கூ-வராகனும் மூன்று வராகனுக்கு நகையும் செய்து கலியாணத்தை முடித்தேன்" என்று தாத்தா சொன்னர். நியாயந்தான். பணம் போவதைப் பற்றி அவசியமில்லை. ஆனல், பெண்ணைப்பற்றியும் வாலிபர்களைப்பற்றியும் தாங்கள் யோசிக்கவில்லையே! கிழ வர்கள் வாலிபங்கொண்டாட முன் வந்து விடுவதால் வாலிபர்களுக்குப் பெண் அரிதாகிறது. பெண்களுள் ளும் வெள்ளைப்புடவை அதிகரிக்கிறது. இளைஞர்கள் இளம் பெண்களைக் கொள்ள வேண்டும். கிழவர்கள்... ...............ஆம். அதுதான் சரி. இல்லையானல் அனு வசியமாகப் பலர் கஷ்டப்பட்டு வருந்துகிறார்களே? நீங் களிறக்கும்போது அழுவதற்காக ஒரு கலியாணமா என்றேன். இதற்குள் வீட்டினருகில் வந்துவிட்டபடி யால் மறுமுறை சந்திப்பதாகச் சொல்லி மறைந்து விட்டார்.

---

## மணிபர்ஸ் தாத்தா

## II

நமது மணிபர்ஸ் தாத்தாவை நேற்றுச் சந்திக்க நேர்ந்தது. ஆனால் முன் பார்த்தபோதிருந்த முகச் செழிப்பும் உத்சாகமும் முகத்தில் ஜ்வலிக்கவில்லை. ஆனால் துக்கமும் சலிப்பும் நிறைந்திருந்தன. அப்படி யிருந்ததற்குக் காரணம் எனக்கு மிக நன்றாகத் தெரியு மானாலும் நான் அதைக் காட்டிக் கொள்ளாமல், "ஐயா! என்ன சேதி? சௌக்கியந்தானா" வென்று கேட்டேன், மிகுந்த வருத்தத்தோடு ஈன ஸ்வரத்தில் நாக்குழறி மெய் யெலாம் மிக நடுக்குற்று, "ஐயா என்ன சொல்வேன்? சௌக்யமேது; இழவேது. செத்துப்போனால்தான் சவுக்கியமாயிருக்கும்" என்றார். என்ன ஐயா! இப் படிச் சொல்லுகிறீர்கள். உங்கட்கென்ன பணமில்லையா? பெரிய வீடில்லையா? பிள்ளை குட்டிகளில்லையா? உற்று றுறவினரில்லையா? கிராமம் பூமியில்லையா? புதுப்பெண் டாட்டியில்லையா? யாதுகுறை? ஏன் மிக வருந்துகிறீர் கள்." என்று கேட்டேன். அவருக்கு வெட்கம் ஒரு புறம்; ஆத்திரமொரு புறம். "வேறு ஒன்றிலும் குறை யில்லை; ஆனால், அவன் வீட்டிலே கலியாணஞ் செய்து கொண்டேனல்லவா? அந்தக் கழுதையை; அது சனிய னாக வந்திருக்கிறது; என்னைக் கொஞ்சங்கூட மதிக்கிற தில்லை; யார் வந்து கேட்டாலும் கிழவனைக் கேளுங்கள் என்று சொல்கிறது; நேற்று நேரே சொல்லிவிட்டது; காலையில் எழுந்திருந்தால் கிழவன் கிடக்கிறானே என்று ஒரு பலகாரம் செய்கிறதில்லை; வீட்டு வேலையையும் பார்க்

கிறதில்லை; சிவிமுடிக்கவும் பொட்டு வைக்கவும் வரு கிறவர்களுடன் சிரித்து விளையாடவுந்தான் பொழுது சரியாயிருக்கிறது. விசேஷக்காரர் வீடு வந்துவிட்டால் இளவட்டங்களோடு அலங்காரஞ் செய்துகொண்டு புறப் பட்டுவிடுகிறாள். என்னவாகிலும் கேட்டால், எதிரே நின்று சிரிக்கிறாள். ஏனென்றால், நான் பேசுகிறதைப் பார்த்தால் சிரிப்பு வருகிறதாம். வீட்டு வேலையைக் கொஞ்சங்கூடக் கவனிக்காதபடியால், சமையற்காரன் வைத்திருக்கிறேன்; அவன்தான் பொங்குகிறான். ஏன் இந்தச் சனியனைக் கலியாணம் செய்துகொண்டோ மென்று வருத்தமாயிருக்கிறது." என்று சொன்னார். எனக்கு ஐயோ! பாவம் என்று தோன்றியது. ஆனால் இந்தக் கிராக்கியில் ஒரு பெண்ணை உபயோகமில்லாது செய்து விட்டாரே யென்று கோபமும் வந்தது. "ஐயா! இந்தப் பெண் இருக்கட்டும். பணந்தான் இருக்கிறதே. நல்ல பெண்ணாகப்பார்த்து வேறொன்றைக் கலியாணஞ் செய்து கொள்ளுங்கள்; சௌகரியமாயிருக்கும்" என் றேன். "அடே! அப்பா!! இனியொரு பெண்ணை நினைக்கவா? சிவசிவா!!! அது முடியாது. செத்தாலும் இன்னொரு பெண் வேண்டவேவேண்டாம்." என்றார். "வயதான பிறகு காட்டுக்குப் போய்த் தவம்செய்வது தான் சுகம்" என்று நூல்கள் கூறுகின்றன; அப்படிக் கில்லாமல் இளம்பெண்ணைக் கலியாணம் செய்து சுக மனுபவிக்க அறுபதாவது வயதில் விரும்பினால், எங்கி ருந்து கிடைக்கும்? துக்கந்தான். உங்கட்கு இன்னொரு முறை பல் வரிசையாக முளைக்குமா? "பெப்பெப்பெ" என்று பேசினால் சின்னப்பிள்ளைகளுக்குச் சிரிப்பு வராம

லென்ன செய்யும்? அதற்காக வருத்தப்படுவதி லொன்று மில்லே. இளம் பெண்களேக் கட்டழகும் கெம்பீரமான பார்வையும் உடைய இளம் புருஷனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தால்தான் ஒழுங்காகவிருக்கும். கிழவர் களேக் கட்டிவைத்தால் ஒருநாளும் ஒழுங்காகப்போகாது. நீங்கள் செய்தது தவருன காரியம். அநுபவிக்கிறீர் கள். யாரென்ன செய்யலாம்? தாத்தா! இன்ளுென்று! தாங்கள் இறந்த பிறகு அந்தப்பெண் அழக்கூட வர மாட்டாள் போலிருக்கிறதே" என்றேன். வந்துவிட் டது கோபம்! "அதென்ன அப்படிச் சொல்கிருய்? நானிருந்த தென்ன? வாழ்ந்ததென்ன? இந்தத் தரங் கெட்ட பயல் வீட்டுப்பெண்ணேக் கொண்டது முதல் கொஞ்சப்பாடா படுகிறேன்! உயிரோடிருக்கிறபோதே நேரில் நின்று கேலி பண்ணுகிற இவள், நான் செத்த பிறகு அழுதாலென்ன? சிரித்தாலென்ன? எப்படியாவது தொலேயட்டும்" என்ருர். முன்ளுெரு முறை சந்தித்த போது "அழுவதற்காவது ஒரு மனைவி வேண்டாமா" என்று சொல்லிய இவர், இப்பொழுது இவ்வளவு வெறுப்படைந்து பேசுகிருர். இப்பொழுதிருக்கிற புத் தியை இவருக்கு கொஞ்ச நாள் முன் கொடுக்காமற் போயினேயே! பரமேசா!

---

## ஷோக் விருந்து

அநியாயச் செலவு செய்யக்கூடாது. செய்கிற செலவெல்லாம் உபயோகமாகவே யிருக்கவேண்டும். வீண் ஆடம்பரங்கூடாது. பணம் அதிகமாக ஏறிவிட்டாலும் செய்வது நியாயமாகத்தானிருக்க வேண்டும். அதற்காக நெய்யிலே கைகழுவக்கூடாது. தண்ணீரிலே கை கழுவினுல்தான் சுத்தமாகும். அந்த மாதிரி தான் எல்லாவற்றிலும் நடந்துகொள்ள வேண்டும். இந்தக் கதை மறந்து போய்விட்டது. போட்டி மேலே போட்டி. அதன் மேலே போட்டி. பெரிய பணக்காரன் புதுமாதிரியாக ஒன்றைச் செய்தால், இல்லாத ஒருவன் வீட்டை யெழுதிவைத்தாவது பணம் வாங்கி ஒரு அடி அடித்துவிடுகிறுன். கல்யாணங்களிலே சாப்பாடு நடக்கிறதே அது எதற்காக? சாப்பிடுவது எதற்காக ஐயா? வயிற்றுப்பசியைத் தீர்த்துக்கொள்ளத்தானல்லவா? இல்லை, பெருமைக்கா? கௌரவத்திற்கா? எதற்கு? பசிக்குத்தான் சாப்பிடுவது என்று முழுமூடனும் ஒத்துக்கொள்ளுவான். ஆனுல் நான் ஒன்று சொல்லுகிறேன். நான் பெரிய லக்ஷப்பிரபுவல்ல. ஒரு நாள் எனக்குச் சொந்தக்காரரான பிரபுவீட்டுக் கலியாணத்தில் சாப்பாட்டுக்குச் சென்றேன். வந்திருந்த ஜனங்கட்குக் கணக்கேயில்லை. கோவிலூர்மடத்தில் அ-ம் மண்டபப்படிக்கு எவ்வளவு ஜனங்கள் சாப்பிடுவார்களோ அவ்வளவு ஜனங்களிருக்கலாம். போஜன ஹால் மிகப்பெரிது. மிகக் கஷ்டப்பட்டு உ-மணிக்கு உள்ளே சென்றேன். இலையோ பிரமாண்டம். அதில்

நிறைய சுமார் கூo-தொன்னைகள் வைக்கப்பட்டிருந்தன. பார்த்தேன். ஆச்சரியமாயிருந்தது. இதுவரையில் இலை மேல் தொன்னை வைத்த கதை கேட்டதேயில்லை. ஆனால் திதிசெய்கிற காலத்தில் ஐயருக்கு முன்னால் ஒரு இலை போட்டுப் பல தொன்னைகளை வைப்பது வழக்கம். அந்த மாதிரி அதற்கதிகமான தொன்னைகள் வைக்கப்பட்டிருந்தன. உட்கார்ந்தேன். அதிலிருந்த பலவற்றுள் இரண்டொன்றைத்தான் சாப்பிட முடிந்தது. அதிலிருந்தவற்றை ஒருவர் இருவரால் சாப்பிடமுடியாது. ஏதோ சாப்பிடப்பட்ட சில போகப் பாக்கி தெருவிற்கு வந்துவிட்டன. இரண்டுருண்டை சோறு தின்பதற்குள்ளாக எல்லாரும் கையலம்ப எழுந்துவிட்டார்கள். அதன் பிறகு இருந்தால், கௌரவக் குறைவாம். எல்லாரும் எழுந்து விட்டார்கள். எனக்கு ஒரு வைத்தியர், " சாப்பிடும்போது மெதுவாகச் சாப்பிடுதல் குடலுக்கு நல்ல " தென்று சொல்லியிருந்தார். அப்படியே மெதுவாகச் சாப்பிடுவது எனது வழக்கம். ஆகவே பந்தியில் நான் மட்டுந்தான் பாக்கி. உட்கார்ந்து ஐந்து நிமிஷந்தானயின. எச்சலிலையெடுப்பவர்கள் கடகத்தையும் விளக்குமாற்றையு மெடுத்துக் கொண்டு போஜன ஹாலுக்குள் வந்து விட்டார்கள். இனியிருப்பது கௌரவமில்லையென்று வெளியே வந்து விட்டேன். பசி கடும்பசிதான், இப்படித்தான் எல்லாருக்குமிருந்திருக்கும். என்ன செய்கிறது ? டம்பம் மிகுந்துபோய்விட்டது. அறிந்தறியாதவர்களையெல்லாம் கல்யாணத்துக்கு அழைப்பதும் அவர்கள் வருவதும் சகஜமாகப் போய்விட்டது. கூடுகிறவர்கட்கு ஒன்றும் நஷ்டமில்லாதபடியால் எல்லாரும் கூப்

பிடுமுன் வந்துவிடுகிறார்கள். ௫-ரூபா பண மெழுதி ஞல் கையில் ரொக்கம் ௨௦ ரூபாய். சட்டி ஒன்று ஐந்து ரூபாய்க்கு. பழம் பாக்குவேறே. சாப்பாடு வேறே. இப்போது சாயவேட்டி வேறே. ஆஹா! என்ன திருவிளை யாடல்!! என்ன டம்பம்!!!

பகல் ௧௧ - மணிக்குத் திருப்பூட்டப் போனோம். என்ன உபசாரம்! சொல்லி முடியாது. பெரிய ஹால். அதனுள்ளே அநேகம் மேஜைகள்; அநேகம் குறிச்சி; ஒவ்வொரு குறிச்சிக்கு முன்னல் மேஜைக்கு மேலே ஒவ் வொருமங்குத்தட்டு. அதிலே பாதம் பருப்பு அல்வா. ஒரு சின்னக்காண்டி. கிளாஸ்களிலே காபி. கதவைத் திறந்து விட்டார்கள். சில நாகரிகமான ஆட்கள் "பகல் ௧௧-மணிக்கு என்ன பலகாரம்? வேண்டா" மென்று சொல்லி விட்டார்கள். சாப்பிட வேண்டுமென்று பலர் மோவாயைத் தாங்கிச் சிபார்சு செய்தார்கள். பழைய ஆட்களெல்லாம் வந்து குறிச்சிகளில் உட்கார்ந்தார்கள். மெஜாரிட்டி வயதானவர்கள்தான். சென்னப்பட்டணம் போன சில ஆசாமிகள் கரண்டியாலெடுத்து வாயில்வைத் துக் கூசாமல் சப்ப ஆரம்பித்தார்கள், கிழவர்களுக்குப் பலகாரத்தை விடவும் சம்மதமில்லை; இலையில் வைத் தால்தான் சாப்பிடுவேனென்று சொல்லவும் தைரிய மில்லை. கரண்டியை வைத்துவிட்டுக் கையால் சாப்பிட வும் சாமர்த்தியம் போதவில்லை. அல்வாவை எடுத்து வாயிலே வைத்து நாவால் தடவி அதை விழுங்குவது சிரமமாகப் போய்விட்டது. இரண்டு கரண்டி சாப்பிடு முன் சீன் மாறிவிட்டது. எல்லாரும் கையலம்பப் புறப்பட்டு விட்டார்கள். என்றாலும் பழையகாலத்து

ஆட்கள் விடவில்லை. காபியை யெடுத்தார்கள். இவர்கள் ஆயுளில் கிளாஸில் சாப்பிடுவது இதுதான் முதல் தடவை. வாயில் வைத்துச் சாப்பிட இஷ்டமில்லை. உயரத் தூக்கி வாயில் ஊற்றினர்கள். அது மடித்துக்கொண்டு, பாதி மேஜைமேல் வடியவே, எதிரிலிருந்தவர் சாப்பிட்டவர் எல்லாருடைய முகத்திலும் உடம்பிலும் வேட்டிகளிலும் தெறித்து நாறிப்போய்விட்டது. இந்தப் பழைய ஆசாமிகள்' "ஏதோ புதிய நாகரீகத்தால் ஜாதி கெட்டுப் போய்விட்டது. அந்தக் காலத்தில் நல்ல மாதிரியாயிருந்த" தென்று சொல்கிறார்களே தவிர, செய்கையில் காட்ட முடியவில்லை. எந்த இடத்தில் உட்காரச் சொன்னாலும் சரி. எதைச் சாப்பிடச் சொன்னாலும் சரி. ஆக்ஷேபனை கிடையாது. தைரியம் மருந்துக்கும் இல்லை. "தரையில் தான் உட்காருவேன். இலையில் தான் சாப்பிடுவேன். காபி குடிக்கமாட்டேன். நேரங் கெட்ட நேரத்தில் ஒன்றையும் விழுங்கமாட்டேன்" என்று சொல்லத் துணிவில்லை. கைம்பெண்டாட்டி மாதிரி மூலையிலிருந்து அழுவதில் பயனென்ன? உறுதியாக இன்னதைத்தான் செய்வேன் என்று இந்த ஆசாமிகள் பிடிவாதம் பிடித்திருப்பார்களானல், சமூகத்தில் இத்தனை கஷ்டம் வந்திருக்குமா? சமூகம் இப்போதடையும் கஷ்டங்கட்கு அறுபது வருஷமாக வாழ்ந்த பேர்வழிகள் தானே காரணமாவர். ஊருகிற போதே துடைத்திருந்தால் வெகு சௌகரியமாகப் போயிருக்குமல்லவா? இனிமேலாவது இவர்கள் அழிச்சாட்டியம் பண்ணுமலிருப்பார்களா?



## அதிகார யாசகம்

எனது சிநேகிதர் ஒருவர். அவர் தகப்பனர் ஏராள மாகப் பணம் சம்பாதித்து வைத்து விட்டு இறந்து போனர். எனது சிநேகிதரோ மகா மகா புத்திசாலி. சம்பாத்தியஞ் செய்ய வேண்டுமென்ற ஆசையதிகமுடை யவர். ஆனல் பரமலோபி; ஆருக்கும் அடித்துப் பறிக் காதவரையில் அரைக் காசுங் கொடுக்கமாட்டார். இவ்வ ளவு குணத்தோடு இன்னெரு கெட்டகுணம். கொஞ்சம் கவுரவம் சம்பாதித்துவிடவேண்டும்; பலர் நம்மை மதிக்க வேண்டும் என்ற நோக்கம் அவருக்குண்டு. இவர் வீட் டுக்கு யாசகம் பெறுவதற்காகப் போக்கிரியொருவன் வந்து சேர்ந்தான். சுவாமிக்கு ஒரு அபிஷேகம் செய்ய வேண்டும் என்று சொன்னன். பரமவிபூதி. ருத்ராக்ஷம் ஏராளம். அவனைப் பார்த்தவுடனே இவருக்கு ஒன்றும் சொல்ல நாவெழவில்லை. வந்தவனும் உட்கார்ந்து பல விஷயங்களைப் பேசினன். கடைசியில் பணம் வேண்டு மென்று சொன்னன். இவரும் வேண்டிய மாதிரி பேசி இல்லை யென்று சொன்னர். மூன்று மணி நேரம் தர்க் கம் நடந்தது. ஒருவராவது விடவில்லை. எனது நண்பர் கைகாரர். அரைக்காசு கொடுக்கமாட்டார். வந்தவனும் லேசான ஆளில்லை. இந்த சமயத்தில் இரண்டு மூன்று மோட்டார் வாயிலில் வந்து நின்றன. எனது நண்பர் தட படவென்று கிடந்ததை யெல்லாம் உருட்டி ஒழுங்கு செய்து கம்பீரமாக உட்கார்ந்துகொண்டார். மோட்டாரி லிருந்து சிலர் வந்தார்கள். வந்து உட்காருவதற்கு முன் னமேயே, “அங்கே போனேம்; இங்கே போனேம்;

ஆடுகளைக் கூடக் கழுதைகளாக்கிவிட்டோம்; நம்மபக்கந் தான் வெற்றி; நீங்கள் நமக்கொரு வோட்போட வேண் டும்; உங்கள் பங்காளிகளெல்லாம் நமக்குத்தான்; இது வரை உங்களிடம் எதற்கும் வந்ததில்லை" என்று பத்து நிமிஷம் வார்த்தைகளைக் கக்கினார்கள். இவற்றைக் கேட்ட நண்பர், சரி; சரி; காப்பிசாப்பிடுங்கள் பலகாரம் சாப்பிடுங்கள் என்று வெகு பணிவாகப் பல்லெலாம் வெளியே தெரிய உபசாரம்செய்தார். பார்த்தான் வந் திருந்த விபூதிப்பேர்வழி. இதுதான் சமயம் என்று தெரிந்துகொண்டான். "என்ன செட்டியாரவாள்! திருப் பணி வேலை பூர்த்தியாகவேணும் இன்னும் ஐம்பதாயிரம் வேண்டும்; தாங்கள் நன்றாகச் செய்யவேணும் பெரும் புண்ணியம்" என்று சொன்னான். வந்தவரில் ஒருவர் என்ன சங்கதி யென்று கேட்டார். விபூதிச்சாமி சொல் கிறான். "சோழதேசத்திலே மூவரால் பாடப்பெற்ற க்ஷேத்திரத்தைப் புதுப்பிக்கிறேன்; இப்போது ரூபா இருபதினாயிரம் ஆகிவிட்டது; இன்னும் ஐம்பதாயிரம் வேண்டும்; இங்கே விசாரித்து இவர்களைத் தெரிந்து கொண்டேன்; வந்து கேட்டேன்; இருபத்தைந்து ரூபாய் தருவதாகக் கூறுகிறார்கள்; எப்படிச் சொச்சம் ஆகிற தென்று தெரியவில்லை" யென்றான். அதற்கு வந்தவர், "போதுமையா; வேறுபலரிடமும் வாங்குங்கள்; இங்கே இதுபோது" மென்று சொன்னார். வீட்டுக்காரரான எனது நண்பர்; "நான் அப்படிச்சொல்லவில்லை" யென்று சொன்னால் வெட்கம். தான் பெரும் பணக் காரர். லோபி யென்று வந்தவர்கள் நினைப்பார்கள்; கவு ரவம் போய்விடுகிறது; உடனே கொடுத்தார் ரூபா இரு பத்தைந்து. இதைவிட மூடத்தனம் வேறுண்டோ?

## யாசகப்புரட்டு

இப்போது எல்லாம் புதுமாதிரியாக வல்லவா நடை பெறுகிறது. அப்படியே யாசகம் வாங்குவதும் புதுமாதிரி யாகாமலிருக்குமா? மனிதனுக்குக் கால்கை முதலியன குறைந்து போனால்—ஒன்றும் வேலை பார்க்க முடியாமற் போனால்—அவனுக்குப் பணம் வைத்திருப்பவர் கொடுக்க வேண்டியது கடமையாகும். சில சந்தர்ப்பத்தில் குடிக்கக் கஞ்சி யில்லாமலாவது மனைவி யில்லாமலாவது தரித்திரத் தால் பீடிக்கப்பட்டாலும் கொடுக்கலாம். கோவில் கட்டல் குளம் வெட்டல் முதலியவற்றுக்கும் யாசகம் கொடுப் பார்கள். ஆனால் யாசகம் வாங்க வருபவர்கள் யோக்கியர் களாகவும் சாதுக்களாகவுமிருக்க வேண்டும். குடியருக் கும் மடியருக்கும் தடியருக்கும் வேசிவீடேகிக் காசை யழிக்கும் கசடர்களுக்குங் கொடுக்கலாமா? கோவிலுக் குப் பணம் வாங்கிக் குடும்பத்துக்கு வைத்துக்கொள்ளு கிற குருடர்களுக்குக் கொடுக்கலாமா? தேசத்துக்கென்று வாங்கி மோசம் பண்ணுபவருக்குக் கொடுக்கலாமா? யாகத்துக்கென்று வாங்கிப் போகத்துக்கு வைப்பாருக் குக் கொடுக்கலாமா? கூடாது! கூடாது!! கூடாது!!! பாத்திரமறிந்தல்லவா பிச்சை யிடவேண்டும்? அந்தப் பழைய பயித்தியக்காரக் காலத்திலே அருச்சுனன் ஒரு வேடனுக்கு அரைக் காசு கொடுத்தான். அவன் அதைக் கொண்டுபோய் ஒரு தூண்டில் முள் வாங்கி மீன்பிடித்து விற்றுக் கோடி ரூபா சேர்த்துவிட்டான். அவ்வளவு பாவமும் அருச்சுனனுக்கு வந்துவிட்டதென்று விடிய விடியப் புராணம் கேட்கிறோம். நாம் கொடுக்கும்போது

விசாரித்துக் கொடுக்கவேண்டாமா? இதொருபுறங் கிடக்கட்டும். இப்போது யாசகம் வாங்குவது புது மாதிரியாகிவிட்டதே! தனித்தனி மனிதராகப் போனால் இந்தக் காலத்தில் யாசகம் அதிகமாகக் கிடைக்கவில்லையென்று யாசகம் வாங்குபவர்கள் புதுமுறை கண்டுபிடித்துவிட்டார்கள். மேற்குநாட்டார் ரயில் மோட்டார் ஆகாயக் கப்பல்களைக் கண்டு பிடிக்கிறார்களே. நாம் அவர்களை விடக் கேவலமா? யாசகத்தில் புதுப்புது மாதிரி. நமது நாட்டிலுள்ள யாசக நிபுணர்களும் எப்படி யாசகம் வாங்குவது எப்படி மோசம் பண்ணுவதென்று சாமர்த்தியமாகக் கண்டுபிடிக்கிறார்கள். ஒருநாள் ஒரு சத்திரத்து வாசல் திண்ணையிலுள்ள ஒரு தூணில் சாய்ந்துகொண்டிருந்தேன். அங்கே சில ஆசாமிகள் இருந்தார்கள். அவர்களுள் ஒரு நீண்ட பேச்சு நடந்தது. பொய் சொல்லலாமா கூடாதாவென்று தர்க்கம் பண்ணிப் "பொய் சொல்லலாம் ஆனால் பொருந்தச் சொல்லவேண்டும்" என்று முடிவு செய்தார்கள். அதிலே ஒரு பிராமணன் தான் அப்படித்தான் நடப்பதென்று சொல்லி உதாரணமாகத் தன் கதையைப் பின்வருமாறு சொன்னான். "நேற்றுக்காலையில் அதோ இருக்கிறாளே அழகான அம்மாள். அவளையும் அவள் மகனையும் அழைத்துக்கொண்டுபோய் ஒரு பிரபுவினிடத்தில் காட்டி ஹே! மகாப்பிரபோ! இவள் என் பார்யை. இது எனது குழந்தை! இதற்குப் பூணூல் கல்யாணம் செய்யவேணும் என்று கண்ணீர் வடியச்சொன்னேன்; அவர் பிராமண விசுவாஸியாதலால் அடடா. சிவ சிவ. ஐயா! இவருக்கு நூறு ரூபா கொடுங்கள். சுவாமி! வாங்கிக்கொண்டு

போங்கள்! இவ்வளவு நாளைக்கு உபநயனம் செய்யா திருக்கலாமா? பிராமணக் குழந்தை! என்றார். ரூபா நூறை வாங்கி நான் ஐம்பதெடுத்துக் கொண்டேன். அந்த அம்மாளுக்கும் பிள்ளைக்கும் ஐம்பது! ஏன் எப்படி?" என்றார். உடனே பக்கத்திலிருந்த ஒரு ஆண்டிக்கு மீசை துடித்தது. "என்னவோய் பார்ப் பான்! நீ மகாகெட்டிக்காரனென்று பீத்துகிறுயே! நான் யார் தெரியுமா? சித்திரைமீ உ௦வ வெள்ளிக்கிழமை காலை கக-மணிக்கு நான் அமரர் கோட்டத்திலுள்ள கருப் பூரணிச் சத்திரத்தில் உனக்கு ஐந்து ரூபா யாசகந் தரவில்லையா? அடையாளந் தெரியவில்லையோ'' என்றுன். "நீயா? பெரிய மகான் சந்யாச சுவாமிகளல்லரோ கொடுத்தார்" என்றுன் பிராமணன். வேதாந்த சித் தாந்த சமரச சாபம் சுந்தரத் தொந்திச் சன்யாச சுவாமி கள் நாம்தான். பணந்தேடப் பல வழிகள் கண்டுபிடித் துள்ளோம். அதில் அதொருவழி. அப்பொழுது அந்தத் திருக்கோலங் கொண்டிருந்தோம். இப்போது ஆண்டித் திருக்கோலம். அப்போது பத்துப்பேர் ஒன்றுகச் சேர்ந்து கொண்டோம். எனக்குக் கொஞ்சம் படிப்புண்டாதலால் நான் சாமியாரானேன். மீதி எட்டுப்பேரும் சிஷ்யர்க ளானுர்கள். வந்தவருக்கெல்லாம் "இஷ்ட சித்திரஸ்து'' "நினைத்தது கைகூடட்டும்" என்று ஆசீர்வாதம் செய்து விபூதி கொடுத்தேன். இப்படி ஆயிரம் பேரில் ஒருவ னுக்குப் பலித்தது. அந்த மூடசிகாமணி ஒரு பணக் காரன். அவன் மனைவி கர்ப்பமானுள். அவன் நாமிருக்கு மிடத்தில் வந்து ஒரு பல்லக்கும் மகரகண்டியும் வெள் ளிப்பூசைப் பாத்திரங்களும் தந்தான். பிறகு, இரண்டு

பேர் பல்லக்குத்தூக்குவதென்றும், இரண்டு பேர் கட்டியஞ் சொல்வதென்றும், இருவர் விசிறி போடுவதென்றும் இருவர் முன்னமே போய் பூசை முதலியவற்றிற்கு ஜாகை முதலியன ஏற்படுத்துவதென்றும் ஒப்பந்தம் செய்து கொண்டோம். அந்த யாத்திரையில் தான் தாங்கள் ஆசிர்வாதம் பண்ண வந்தபோது ஆள்கூட்டம் அதிகமாக இருந்தபடியால் ரூபா அஞ்சு கொடுத்தது. தெரியுமா? அப்படி யெல்லாம் சம்பாதித்து செலவு போக ஐயாயிரம் அகப்பட்டது. அதில் எனக்கு ஐநூறு கிடைத்தது. பிறகு அந்தக்கூட்டத்தில் சச்சரவு உண்டாகிவிட்டது. ஆகையால் இப்படிக் கப்பரையுங் கையுமானேன். நான் சாப்பிடாத பிராமண போஜனங் கிடையாது. நானில்லாத பண்டாரக் கூட்டமுங் கிடையாது. நானுண்ணாத சத்திரமுங் கிடையாது என்று சொன்னான். இந்த இடத்திலே உட்கார்ந்திருப்பதே பாவமென்று நினைத்தெழுந்து வந்துவிட்டேன். இவர்கட்குக் கொடுப்பது தருமமா? அல்லது பாவமூட்டையா? தருமம் செய்பவர்களே ஜாக்ரதை! உஷார்!



## காட்டுப்பக்ஷி

ஒரு காட்டில் வசித்த பக்ஷிகளெல்லாம் ஒன்ருகக் கூடி ஒரு தோட்டம் போட்டன. அதில் ஏராளமாக அவற்றிற்கு வேண்டிய பலமாஞ்செடிகளை யுண்டாக்கின. அவற்றிலுண்டான இனிய பழங்களைச் சந்தோஷமாக எல்லாப் பக்ஷிகளும் உண்டுகளித்திருந்தன. பழங்களும் பூச்சி முதலியன இல்லாமல் நன்ருகவே கிடைக்கப் பெற்றன. நாளாக நாளாகப் பயனைமட்டும் கருதி பாது காக்காதபடியால், அத்தோட்டம் வர வர அழிந்துபோக ஆரம்பித்ததோடு மாஞ் செடிகளும் செழிப்பின்றிப் போய் பலன் குறையவாரம்பித்தது. இந்த ஸந்தர்ப்பத் தில் அந்தத்தோட்டம் எல்லாப் பக்ஷிகளுக்கும் பொதுவா யிருந்தாலும், சில வாயாடிப் பக்ஷிகளும் வலிவுள்ள பக்ஷி களும் நல்ல பழங்களைப் பிடுங்கித்தின்றுவர ஆரம்பித் தன மற்றும் ஏழைப்பக்ஷிகளும் அப்பாவிப்பக்ஷிகளும் பசியைப்பொறுக்கமாட்டாமல் கஷ்டமுற்றன. சில பக்ஷி கள் சூம்பின — பூச்சிகடித்த — அழுகின — தள்ளுபடி யான பழங்களைத் தின்று வருந்தின.

இப்படிக் காலந்தள்ளி வருகிறபோது, சுகாதாரந் தெரிந்த ஒரு பக்ஷி தைரியமாகக்கிளம்பி, "ஏபக்ஷிகளே! என் இப்படி உபயோகமற்றவைகளை உண்டு கஷ்டப்படு கிறீர்கள்? பூச்சி விழுந்த பதார்த்தங்களையும் கெட்டுப் போன பதார்த்தங்களையும் உண்ணுகிறீர்கள். அதனுல் கொடிய வியாதிகள் வரும். பல கஷ்டங்களை யனுபவிப் பீர்கள். இப்போது அனுபவிக்கிறீர்களல்லவா? இதற் குச் சரியான வழி செய்யவேண்டும். கொஞ்சம் பொறுத்

திருங்கள்" என்று சொல்லிவிட்டு, நன்றாக உண்டு வேறு விஷயங்களைக் கவனிக்காமல் கொழுத்துப்போய் வாழும் வலிவுள்ள பக்ஷிகளைப்பார்த்து, "தோட்டத்திலே யுள்ளபழங்களில் உங்கட்கு வேண்டியவைகளைப் பொறுக் கித்தின்றுவிட்டு, ஏழைகட்கு உண்ண ஒன்றுங்கிடைக்கா விட்டாலும் அதைப்பற்றிக் கவனிக்காமல், அவைகளைக் கஷ்டப்படுத்தல் தருமமா? நீங்கள் உண்பதுபோல் கிடைக்காவிட்டாலும், ஏதாவதொரு சிறிதாவது அவை கள் பசி தீர உண்ண வேண்டாமா? உங்கள் ஜாதியா ராகிய மற்றவைகளையும் கொஞ்சம் கடைக் கண்ணால் பாருங்கள். தோட்டத்துப்பயிரை நல்ல பலன் தரும்படி செய்யுங்கள். திருடர் கொண்டு போகாமல் காப்பாற்றுங் கள். ஏழைகள் பசிக்க, நீங்கள் விலாப் புடைக்கத் தின்று மகிழ்வது கடவுளுக்கும் ஏற்கமாட்டாது" என்று தைரியமாகக் கூறியது. இதைக் கேட்டவுடன் நல்ல பொருள்களைத் தின்று சுய நலத்தையே நாடி நிற்கும் பக்ஷிகட்குப் பொறுக்க முடியவில்லை. கோபம் மூக்கிற்கு வந்துவிட்டது. சுகாதாரம் பேசவந்த பக்ஷியைப்பார்த்து, "நீ உன் வயிற்றுக்குப் பார்த்து கொண்டுபேசாதுகிட. மற்றவர்களைப் பற்றி யேன் பேசுகிறாய்? தோட்டத்தைப் பற்றி நீ யெப்படிப் பேசலாம்? சும்மா கிடக்கிறபக்ஷிகளை நீ கிளப்பிவிட்டு வம்பு உண்டாக்குகிறாய். நாங்கள் வெகு நாளாகப் பாடு பட்டு இந்தத் தோட்டத்துப் பழங்கள் மிக உயர்ந்தனவென்று பேர் உண்டாக்க மிகமிகப் பாடு படுகிறோம். எங்களுடைய தோட்டத்தில் பூச்சிக்காய் அழுக்கற்காய் சூம்பற்காய் இருக்கிறதென்று மற்றவர் அறியும்படி செய்யலாமா? மற்றவரறிந்தால் எங்களை

மதிப்பார்களா? எங்கள் பேரைக் கெடுக்கப் பார்க்கிறாயா? தோட்டத்தைக் கவனிக்க வேண்டியது எங்களுடைய பொறுப்பு. நாங்கள் இந்தத் தோட்டத்தி லிருக்கிற பழங்களைக் காட்டாதவர்க ளிடமெல்லாம் காட்டி எங்களை மதிக்கும்படி செய்து தோட்டத்தைக் கண்ணியப்படுத்த எவ்வளவோ பாடுபட்டு வருகிறோம். நீ இளம்பி, தோட்டத்தில் குற்றமிருக்கிறதென்று எப்படிப் பேசலாம்? அதைத் திருத்த நாங்களும் வரமாட்டோம். இவையெல்லாம் ஆகிற காரியமில்லை" என்று சொல்லி விட்டன. இந்த மாதிரி கஷ்டப்படுகிற ஏழைகளும் பெரிய மனிதரும் நம் சமூகத்திலிருக்கிறார்களோவென்று தெரிந்து கொள்ள நல்ல சோதிடரைப்பார்த்துக்கொண்டு வருகிறேன்.



## கௌரவ காபிகிளப்

காபிகிளப். காபிகிளப். எங்கே பார்த்தாலும் காபி கிளப் மலிந்துவிட்டது. மற்ற கடைகளைவிட இந்தக் கடை மிக மலிவு. கோவிலில்லாத ஊரிலும் தாபாலாபீஸ் இல்லாத ஊரிலும் காபிகிளப்புக்குக் குறைவில்லை. காபி குடிப்பது மேலை நாட்டார் வழக்கம். முந்தின காலத்திலே நூறு வருஷ மிருந்தார்களே பைத்தியக்காரர்கள் அவர்களுக்கு இந்த சங்கதியே தெரியாது. அவர்கள் காலையிலெழுந்து நல்ல பழையகஞ்சியை ஒரு அடி அடிப்பார்கள். குழந்தை குட்டிகளெல்லாம் நல்ல வேலை பார்த்துவிட்டு கஞ்சியைக் குடித்து காளங்கன்றுமாதிரி தாவித்திரிவார்கள். இப்போது காலம் மாறிப்போய்விட்டது. வயலில் உழுகிற பெண்பிள்ளை கூட காபிகேட்கிறாள். காபி குடியாத ஆள் நிறைந்த வீடு ஒன்று கூட கிடையாது. காபி குடியாதவனுக்குத் தான் மதிப்பில்லையே? பழையது சாப்பிடுகிறாயா? பலகாரம் சாப்பிடுகிறாயாவென்று கேட்கிற கதை மறந்தே போய்விட்டது. "என் காபி சாப்பிடலாமே" என்று தான் கேட்கிறார்கள் காபி குடியாதவனுக்கு அவ்வளவு மதிப்பில்லை. அவன் நாகரிகந் தெரியாதவன். நாட்டுப்புறத்தான். காலையில் எப்படி இருந்தாலும் மாலையில் காபிகிளப்புக்குப்போனால் தான் கௌரவம். அதிலும் கையில் காசு கொடுப்பது அவ்வளவு மதிப்பில்லை. "ஐயா! கணக்கெழுதிக்கொள்ளும்" என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியில் போய் விடவேண்டும். அது தான் கௌரவம். அவன் எவ்வளவெழுதினாலும் சரிதான். 'பணம் எவ்வளவாகிறது'

என்று கேட்பதுகூட அவ்வளவுமதிப்பில்லை. இந்தக் காரணத்தால் ஐயர்மார்கள் காபிகிளப் வைக்கக்கிளம்பி விட்டார்கள். பூரிவாங்குவது தானம் வாங்குவது முதற் படி. காபிகிளப் வைப்பது இரண்டாவது படி. இரண் டாவதுபடி ஆசாமிகளும் மலிந்து விட்டார்கள். இந்த வேலை அவ்வளவு கஷ்டமில்லை. முதலும் அதிகமாகத் தேவையில்லை. அதிகமான புத்தியும் வேண்டியதில்லை. சாப்பாட்டுச் சரக்காதலால் வியாபாரம் சூடாக நடந்து விடுகிறது.

காபிகிளப்பில் இருக்கிற ஆசாமிகள் காலையில் மூஞ்சி கூடக் கழுவுகிறதில்லை. பல்விளக்கிறதெல்லாம் நடுப்பகலில் தான். சந்தியாவந்தன சங்கதி சொல்ல வேண்டியதில்லை. ஆசாரம் கொலைபண்ணப்படுகிற இடம் காபிகிளப் தான். இங்கேயிருந்துதான் வியாதிகள் பரவுவது வழக்கம். அநேகம் கிளப்புகளில் சட்டிகளைக் கழுவுகிறதேயில்லை. சட்டி கழுவ ஒருதொட்டி. வாயில் கவ்விக்கொண்டு காபியைக்குடித்துவிட்டு கறுப்புத் துரை மார்கள் கீழே சட்டியையும் குவளையையும் வைத்துவிடு வார்கள். உடனே திவ்யமான ஐயரொருவர் வருவார். தோளில் ஒரு கரிபிடித்த துண்டு இருக்கும். அதை எடுத்து அந்த நாற்காலியில் சிந்தியிருக்கும் எச்சற் காபி யையும் எச்சற் பலகாரத்தையும் அழுத்தமாகத்தேய்த்து விட்டுத் தோளிற் போட்டுக்கொள்வார். சட்டியையும் குவளையையும் எடுத்து அந்தத்தொட்டியில் போடுவார். பிறகு வேறொருவருக்கு அந்தச் சட்டியில் காபி வந்து விடும். அவரும் கடித்துக் குடித்துவிட்டு வைப்பார். அதன் பிறகு மேலே சொன்ன சடங்குகள் தான். இப்

படிப் பலருடைய எச்சற் பாத்திரங்களைக் கழுவிய தண்ணீர் நிறைந்த இனிமையான வாசனை வீசுகிற தொட்டியின் பெருமை சொல்ல முடியாது. இனி பலகாரம் சாப்பிட்ட எச்சலிலையை எடுத்து வெளியிலே எறியாமல் நாற்காலியின் கீழே தள்ளிவிடுகிற கிளப்தான் பெரிய நாகரிகமான கிளப். நாற்காலியில்போய் உட்கார்ந்தால் முழங்கால் உயரம் எச்சலிலை கீழே கிடக்கும். இன்னும் கொஞ்சம் நாகரிகத்தில் பழுத்த கிளப்புக்குப்போனால் ஒரு தட்டு ஒரு கரண்டி. அதை வாயில்வைத்து சாப்பிடவேண்டும். வெட்கப்பட்டால் எல்லாரும் சிரிப்பார்கள். தெய்வமே இந்தியா இப்படிப்போய்விட்டது. மாயைபிடித்து ஆட்டுகிறது.



## ஏ வீரலக்ஷ்மி !

"முந்தின காலத்திலே வீமனும் ராமனும் அருச்சுனனும் அரிச்சந்திரனும் கர்ணனும் பிறந்திருந்தார்களாம். பாரத ராமாயணங்கள் முழங்குகின்றன. இப்போதிருக்கிற சங்கதியைப் பார்த்தால் அந்த காலத்தில் அப்படிப்பட்ட ஆசாமிகள் எப்படிப் பிறந்திருக்கக்கூடுமென்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. அது பொய்யென்று சொல்லவும் முடியவில்லை. இதைப்பற்றி நீண்ட நாளாக சந்தேகமாயிருக்கிறது" என்று எனது சாதாரண நண்பர் வெகு வருத்தமாகக் கேட்டார். எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது. ஐயோ! நமது நாடு இப்படிப் போய்விட்டதே. வீரர்களும் தீரர்களும் வள்ளல்களுமிருந்து அள்ளி வழங்கியநாடு இப்படிப்போய்விட்டதே! அவர்களுமிருந்தார்களா வென்று ஒருவர் சந்தேகப்படுகிறாரே யென்று உண்மையான ஒருவன் எண்ணினால் கண்ணீர் மட்டுந்தானாவரும்? இப்போது ஆண்பிள்ளைகளைப் பார்த்தால் வயிறெரிகிறது. வீதியிலே நடக்கிறபொழுது நமது வாலிபக் குழந்தைகள் காலோடுகால் இணையடிக்கிறது. நடக்கும்போது உடம்பு துவளுகிறது. கையும் காலும் வாழைத்தண்டைப்போலிருக்கின்றன., காற்றடித்தால் பயந்து நடுங்குகிறான். மாலை ஆறு மணிக்கு வீட்டுக்கதவு திறந்திருந்தால் வயிற்றைக் கலக்குகிறது. கண்ணைப் பார்த்தால் ருதுவாகி நோய் பிடித்த பெண்ணின் கண்மாதிரியாயிருக்கிறது. அநேகம் வாலிபர்களிடத்தில் கௌரவமான பார்வையும் கம்பீரமான நடையும் தைரியமான தோற்றமும் வாடகைக்குக்

கூடக் குடியிருக்க மாட்டோமென்கின்றன. பதினைந்து வருஷம் வருமுன்னரே கால் பிடிக்கவும் மேல் பிடிக்கவும் குளிப்பாட்டவும் ஆட்கள் வேண்டியிருக்கிறது. பிறந்த ஒன்றரை வருஷத்திலே கலியாணப் பேச்சு! பத்துப் பன்னிரண்டில் வைத்துவிட்டுச் செய்ய உத்தேசம்! சின்னக்குழந்தைகளுக்குப் பெரிய ஆச்சிமார்கள் ஜோடி! உருப்படியாவதெங்கே! பிறந்தது முதல் ஒரே எண்ணம்! ஒரே நோக்கம்! கீழே விழுகிறபோதே விழுவதற்கு முன்னே கலியாணப் பேச்சு! எழெட்டான உடனே பெண்டாட்டி! அந்தப்பெண் பெரிய மனுஷியாகு முன்னமே வேறு வைத்தல். குடித்தன வாழ்க்கை! ஆஹா! என்ன இன்பமான வாழ்வு! பெண் பெரியவளாகிவிட்டால் போதும்! பையனுக்குப் பதினைந்து கூட வேண்டியதில்லை. பிள்ளை தேடி ராமேஸ்வர யாத்திரை! இதற்குச் சில அசட்டுப் பார்ப்பான்கள்! ஜாதகம்! அஞ்சாமிட ஆராய்ச்சி! நாகப்பிரதிஷ்டை! பிராமணபோஜனம்! பரிகாரங்கள்! என்ன மானங்கெட்ட விவகாரம்! எங்கள் பாட்டன் காலத்தில் முப்பது வருஷத்துக்கு முன்னர் கலியாணப் பேச்சேகிடையாது. பெரிய மனுஷியாகி இரண்டு வருஷத்திற்கு முன்னலே கலியாணங்கிடையாது. அந்தப் பயித்தியக்கார காலத்திலே பொம்மைக் கலியாணமுங் கிடையாது! எலிக்குஞ்சுப் பிள்ளையும் பிறக்கவில்லை! ஆத்திக் கட்டையைக் குப்பை மேட்டில் போட்டு மாப்பிள்ளை வெட்டவேண்டும். அதற்கு வலுவிருந்தால்தான் கலியாணம் பண்ணுவார்கள்! இப்போது மேல் வேட்டியைத் தூக்க முடியாத வாலிபசிம்மங்களுக்குக் கலியாணம்! முந்தின காலத்தில் முப்பது

வயது மாப்பிளைக்குக்கூட ராமேஸ்வரம் போவது அதிக மில்லை. இப்போது பனிரண்டில் பிள்ளை பிறக்காவிட்டால் பரிகாரம்செய்தே தீரவேண்டும். இல்லாவிட்டால் சண்டை பொறுக்க முடியாது! இப்படிக் காலங் கெட்டுப்போய் விட்டது. பீமசேனன் மாதிரிப்பிள்ளை யெப்படிப்பிறக்கும்?. தற்காலப் பிள்ளைகளுக்கு, பூப்பிள்ளையும் பிஞ்சுப் பிள்ளையும் பிறந்து பழுக்காமல் வெம்பி விழுந்து போகின்றன. உரமான தீரமான சிங்கக்குட்டிகள் பிறக்க வழியில்லை. இந்தக்காலத்து வாலிபப் பிள்ளைகளுக்கு "சாப்பாடு சலவைவேட்டி வண்டிமாடு பெண்டாட்டி ஷோக்கு பிள்ளைப்பெறுதல் அலங்காரம் செய்து கொள்ளுதல் இவைகளே தியானம்! இந்த எண்ணங்கள் தானே மனிதனைச் சுரைக்கூடாக்குவது! கம்பீரமான எண்ணம் வாலிபர்கட்கு வேண்டும். என் ஜாதி முன்னேற வேண்டும். எனது தேசம் முன்னேற வேண்டும். எனது சமயம் முன்னேற வேண்டும். எனது ஜனங்கள் முன்னேற வேண்டும் என்ற எண்ணங்கள் நெஞ்சு நிறையப் புகுமானால் வாலிபன் முகத்தில் லக்ஷ்மீகாம் தவழும். தைரியமும் வீரமும் மனத்திலிருக்குமானால் முகத்தில் ஒளி வீசும். ஏ வீரலக்ஷ்மி! எனது இளஞ் சகோதரர்கள் மனக்கோயிலில் குடியிருப்பாயாக!



# ட்ராமா

ட்ராமா ஆடுகிறார்களே அது எதற்காக என்று எனது நண்பர் சாமியாரைக் கேட்டேன். அவர் ஒரே அடியாக அதற்குத் தத்துவார்த்தஞ் சொல்லக் கிளம்பி விட்டார் கேட்கக் கேட்க எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. பரமசிவன் கூத்தாடினாராம். பெருமாளும் திருவரங்கத்தில் ஆடினாராம். அதாவது நாடகம் என்பதற்கு "உள்முகமாக நோக்கு" என்று ஒரு பொருளுண்டாம். இது கிடக்க வேறென்று சொன்னார். அதாவது:—நாடகத்தில் ஒருவனே பல பார்ட் போட்டு வருகிறான். ராஜாவாக வந்தவனே தோட்டியாக வருகிறான். கூலிக்காரனாக வந்தவனே ராஜாவாக வருகிறான். நரிக்குறவனாக வந்தவன் தேவப்பிராமணனாக வருகிறான். அப்போதப்போது அவன் கொண்ட கோலத்திற்குத் தக்கபடியாக நடிக்கிறான். கொஞ்சம் தவறினாலும் ஜனங்கள் கையைத்தட்டிக் கேலி செய்கிறார்கள். இதனால் விளங்குவதென்ன? ஒரே ஆன்மா தன் கர்மத்துக்கேற்ப ஒவ்வொரு கோலங் கொண்டு உலகிற் பிறக்கிறான். பிறந்து வளர்ந்து அவனுடைய கர்மத்தைச் சரியாகச் செய்ய வேண்டும் என்பதொரு பொருள். தோட்டியாக விருப்பது, ஒரு வேஷமேயன்றி அவன் உண்மையில் தோட்டியில்லை. அப்படியே உடல் உலகத்தில் பற்றியிருந்தாலும் ஆன்மாவுக்கு பந்தமில்லை யென்பதொன்று. இப்படி யெத்தனை யெத்தனையோ தத்துவார்த்தங்கள் சொல்லி இதனாலும் பாமர ஜனங்கட்கு நல்லறிவு புகட்டலாமென்று கூறினார். வியாயந்தான். என்ன செய்

கிறது? ஒவ்வொரு பெரியோர்களும் இந்தப் பாழாய்ப் போன உலகத்திலே பிறந்து கஷ்டப்பட்டு, இந்தச் சிக்குப்பிடித்த ஜனங்களைத் திருத்த எத்தனை யெத்தனை யுபாயங்களையோ செய்கிறார்கள். ஆனால் அவையாவும் வக்கரமாகவே போய்விடுகின்றன. மாம்பழத்தையும் கத்தியையும் கொடுத்தால் அதனை நறுக்கி யுண்ணத் தெரியவில்லை. கையை நறுக்கிக் கொண்டு துன்பப்படுகிறார்கள். ஐயோ பாவம்! நன்றாயிருக்கட்டும் என்று ஒரு கோவிலைக் கட்டிவைத்தால் அங்கே தாசியாட்டம் வலுத்துப் போகிறது. அதிலிருந்து அபசாரம் விளைகிறது. ஒரு தளிகையாராதனம் செய்ய சாமான் வாங்கிக் கொடுத்தால் கல்லு மண்ணும் கலந்து பாத்திரத்தைக் கூடத் தேய்க்காமல் பொங்கி விடுகிறான். அதுவும் போதாதென்று ஒரு நாறத்துணியை அதன்மேல் மூடிக் கொண்டு வந்து விடுகிறான். அர்ச்சனை செய்யப் போனால் "கொண்டா கூலிக்காசு" என்கிறான். சாமி கும்பிடப்போனால் காசு. தேங்காயுடைத்தால் காசு. மூச்சு விட்டால் காசு. இப்படி வாங்கிக் கோவிலை ஒரு சுங்கச் சாவடியாக்கிவிட்டார்கள். கோவிலில் ஒரு விளக்குப் போட வேண்டுமென்று விரும்பினால் பண்டாரத்திற்கு ஆயிரம் வேண்டுமாம். பக்கத்திலிருப்பவருக்கு வேறே! ஏற்றுகிறவனுக்குச் சம்பளம்! எல்லாருக்கும் காணிக்கை செலுத்திவிட்டாலும் காரியம் ஒழுங்காய் நடக்கிறதா? இல்லை. விளக்கில் எண்ணை பாதி; களிம்பு பாதி. உயர விளக்குப் போட்டால் பாதி யெண்ணை தரையிலே. அல்லது அங்கு நிற்பவர் தலையிலே சொட்டுகிறது. தரை யெல்லாம் பிசு பிசு. வந்தவர் தலையெல்லாம் பிசு பிசு

வேட்டியானும் பிசு பிசு. சிவசிவ. விளக்குப் போடாதிருப் பது நலமோவென்று தோன்றுகிறது. சுத்த ஆபாஸம். புண்ணியஞ் செய்யப் போனல் குறுக்கே கிடக்கிற சனீஸ்வரன்கள் பாபமூட்டை யாக்கிவிடுகிறார்கள். இதனால்தான் கழிபட்ட உலகமென்று நான் சொல்லு கிறேன்.

இப்படித்தான் ஒவ்வொன்று மிருக்கிறது. பெரி யவர்கள் எப்படி இந்த ஜனங்களைத் திருத்தலாமென்று பல நாள் யோஜித்துக் கண்டுபிடித்து வேலை செய்கிறார் கள். இந்த உலகத்து ஜனங்கள், குரங்கு கையில் அகப் பட்ட பூமாலையைப் போலாக்கித் துன்பப்படுகின்றனர். கொடிய பாவத்துக்கும் ஆளாகிவிடுகின்றனர். இப்படிப் பட்டவகையில் நாடகமு மொன்றாகிவிட்டது. இப்போது நாடகம் நடக்கிற முறை பலே தமாஷ்! வண்டிவிரட்டல் ஒரு ஷோக்! வண்டிகட்டி வருவார்கள். வண்டி யோட் டுவதென்றால் என்ன? லேசா? பெரிய சிமான் வீட்டுப் பிள்ளைகள்கூட வண்டிக்காரனை உள்ளே வைத்துவிட்டு மாட்டின் வாலைப்பிடித்துக் கடித்தாவது ஒட்டும்படி அவ் வளவு ஜோர்! படுவிரட்டாக விரட்டி வாயில்லா ஜீவன்கள் எத்தனையோ வானுலகஞ் சேர்ந்திருக்கின்றன. கால் முறிந்த தெத்தனை? வாய் தேய்ந்து வயிறு உறைந்ததெத் தனை? இதுதான் முதற்காட்சி! தலையிலே ஒரு தலைக் கட்டுக்கட்டி வாயிலே ஒரு புகைச்சுருட்டுப் பற்றிக் கை யிலே ஒரு பிரம்பு பிடித்துத் தோளிலே ஒரு பட்டுப் போட்டு வாயிலே வெற்றிலை புகையிலை அமுக்கி ஒய்யார நடை நடந்து அருமை நண்பர்களுடன் சோபாவில் உட் கார்ந்தால் அது ஒரு இந்த்ரபதவி! இன்னும் கொஞ்சம்

மேலே போனால் ஒரு ஜோடி! ஒரு ஜில்!! இனி இதற்கேற்ற பலதோழர்கள்! அதன் பிறகு எழுதிக்கொடுத்தல்! இதொரு தண்டவாளம். இந்தத் தண்டவாளத்திலே ரயில் ஏறிவிட்டால் அந்தப் பேர்வழியைச் செலவேட்டில் தாக்கல் செய்துவிட்டுத் தலையை முழுகவேண்டியதுதான்.

அநேகமாக தற்கால ட்ராமா சொல்ல வேண்டியதில்லை. தருமத்திற்காகவும் சத்யத்திற்காகவும் ஆடிய காலம் மலையேறிவிட்டது. சேக்ஷ்பியர் என்ற ஒரு பெரியவர் ஆங்கில நாட்டிற்பிறந்து அந்த தேசத்திலே ட்ராமா ஆடி ஜனங்களை நல்வழிப்படுத்தினாராம். அது பழயகதை. இப்போது எங்கோ இரண்டொரு கம்பனிகளிருக்கின்றன. நன்றாக ஆடுகின்றன. அவைகளும் பணம் பிடுங்கித்தின்றாலும் நடவடி கோளாறில்லை. அதிலே போய்ப் பார்ப்பதில் எனக்கு ஆக்ஷேபமில்லை. ஆனால் சில காலாடிக் கம்பனிகளை நாம் மறக்க முடியுமா? அங்கே கூத்தாட்டம் நடக்கவில்லை. கொலையாட்டம் நடக்கிறது. இளம்பிள்ளைகள் அறிவழிந்து கொலை செய்யப்படுகிறார்கள். பெரும்பாலாக இப்போது நடக்கிற ட்ராமாக்கள் ஜனங்களைத் திருத்தவா நடக்கின்றன? இல்லை; இல்லை. எப்படியாவது பணம் சம்பாதிக்கவே நடக்கின்றன. நவரசம் உண்டு என்று பெரியவர்கள் சொல்லுகிறார்கள். இந்த ட்ராமாக்களில் எந்த ரசமிருக்கிறதோ ஈசுவரனுக்குத்தான் வெளிச்சம். ஆனால் ஒரு புதுமையான ரசம். எல்லாம் ஆபாசரசம். சிற்றின்பப் பாட்டுகள். இன்பமா? பெருந்துன்பப் பாட்டுகள்! அதற்கேற்ற கழிபட்ட கதைகள்! நடைமுறையோ

சொல்ல வேண்டியதில்லை. பரமசிவனுக்கும் பார்வதிக்கும் இடையில் மோகிப்புப்பாடல்! ராமனுக்கும் சீதைக்கும்—அரிச்சந்திரனுக்கும் சந்திரவதிக்கும் மோகிப்புப் பாடல் நடக்கும்! ஆணும் பெண்ணுமாகக் கூடியிருந்து இந்த ஆபாஸப் பாடல்களைக் கேட்பதால் என்ன பயன் விளையும்?.............சொல்ல வேண்டியதில்லை. இதிலே பெண் ஆக்டர்கள் வேறே! அப்படியுள்ள கம்பனிகளுக்குக் கொஞ்சம் கிராக்கியதிகம்! ஒரு பெண் நேருக்குநேரே வந்து நின்றால் கல்லுங்கரையுமல்லவா? அங்கே பார்க்கப்போயிருப்பவர்கள் கல்லுக்கு மேற்பட்டவர்களாதலால் கரைந்து உருக வேண்டியதுதானே! விசுவாமித்திரர் தவசி! அவரென்ன பாடுபட்டார் ஒரு பெண்ணைக் கண்டவுடனே! அது உலகத்தில் வழக்கந்தானே! புராணங்களில் சரித்திர மொருபுறமிருக்கும். ட்ராமாக் கொட்டகையின் நடவடிக்கை வேறு விதமாகவிருக்கும். அது வேறே பந்தா! அதுக்கு வழியே அலாதி. புராணத்திற்கும் இதற்கும் சம்பந்தமிருக்காது. இங்கே வருகிற ஆக்டர்களுக்கு சாஸ்திரப் படிப்பு கிருஷ்ணார்ப்பணந்தான்! சில சரித்திரங்களில் ட்ராமாப் புலவர்கள் கதாநாயகர்களின் பெயரைக்கூடப் புரட்டி விடுகிறார்கள். இந்த மானங்கெட்ட கூத்து ஏகாதசி சிவராத்ரி முதலிய புண்ணிய நாட்களிலும் நடைபெறுகிறது. இதைப்பார்க்க வருகிறவர்களைப்பற்றி நான் சொல்ல வேண்டியதில்லை.



## ஜாக்ரதை !

முந்தின காலத்தில் எல்லாரும் அப்பாவிகள்! அகட விகடந் தெரியாது. சோறுந் துணியுமிருந்தால் போதும். பொய் புரட்டில்லாமல் காலத்தைக் கடத்திக் கொண்டு சென்ருர்கள். ஆனல் அவர்களுக்கு ஒரு குறையுமில்லை. மக்களுக்கு இந்த உலகத்திலே என்ன வேண்டும்? பசியாமல் கஞ்சி குடிக்கவேண்டும். மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டுத் துணி கட்டிக் கொள்ளவேண்டும். குடியிருக்க ஒரு வீடு வேண்டும். இவ்வளவுதானே! இதற்கு மேற்பட்ட சங்கதிகளுக்கு டம்பம் என்று பெயரிடுகிறேன். முந்தினகாலத்தில் டம்பமில்லை. அவர்களுக்கு அவசியமான வழியில் தான் அவர்கள் புத்தி சென்றது. இப்போதுதான் காலங்கெட்டுப் போய்விட்டதே! இப்போது எல்லாம் டம்பம். வேட்டி கட்டுவது சேலை யுடுத்துவது நகை போடுவது வண்டி யேறுவது சாப்பிடுவது காபிகுடிப்பது எல்லாம் பெருமைக்காக-டம்பத்துக்காகவல்லவா? வண்டி யேறினல் அது ஒரு மதிப்பு! கடன் வாங்கியாவது பெரிய வீடு கட்டினல் அது ஒரு பெரிய மதிப்பு! காபி கிளப்புக்குப் போவது, அங்கு உட்கார்ந்து குடிப்பது, காசு கொடுக்கிற தினுசு, கணக்கெழுதுகிறமாதிரி, எல்லாம் அப்படிதான். எடுத்ததெல்லாம் டம்பம். எல்லாம் டம்பமயம். இப்படி முழு டம்பம் தலை தூக்கியாடுகிற இந்தப் பாழுங்காலத்திலே பெண்களுக்கும் டம்ப குணம் மிகுந்து போய்விட்டது. பெண்களுக்கு இந்தியாவில் படிப்பில்லை. இவர்களை சமயல் யந்திரம், பிள்ளை பெறு

கிற யந்திரங்களாக உபயோகிக்கிறார்கள். படிப்பில்லாத பெண்களிடத்தில் இந்த டம்பம் தலை தூக்கி யாடுவது ஆச்சரியமில்லை. ஆனால் வரவர முற்றிப்போகும். முற்றிப்போனால் அபாயத்திற் கொண்டு போய்விடுமே? அதுதான் எனக்குப் பெரிய கவலையா யிருக்கிறது. ஒரு சமூகம் நாசமாகப் போவதற்கும் நன்றாக வாழ்வதற்கும் பெண்களே உறை கல்லாக இருக்கிறார்கள். இப்போதே பெண்மக்களை டம்பத்தில் விழாமல் இழுத்து வெளியே போடவேண்டும். இதுதான் முதலாவது செய்யவேண்டிய வேலை. இப்போது பெண்களை டம்பத்திலிழுத்துவிட்ட புதிய நாகரிகம் கடைசியில் எங்கு கொண்டு போய்விடும்? தெரியுமா? சல்லாப்புடவை யணிந்து சங்கிலிப்பதக்கம் போட்டுக் காதலனோடு கடற்கரையுலாத்தச் செய்யும்! ஆணும் பெண்ணுமாக மேசையருகிருந்து குடித்து வெறித்துக் கூத்தாடச் செய்யும். பழையபுராண சாஸ்திரங்கள் சுத்தப்புளுகு தெய்வமில்லை மோக்ஷமில்லை எல்லாம் “நாச்சுரல்” என்று வாதம் பேசி மக்களைப் பாழ்படுத்தச் செய்யும்! அவர்கள் வயிற்றிலே பிறக்கும் குழந்தைகள் நமது நாட்டுக்குச் சனியனாகத் தோன்றும். அடக்கம் நாணம் அச்சம் ஆகாயத்தில் ஒதுங்கிப்போகும்! சோஷல் வந்து காட்சி கொடுத்து பால் விளையாட்டுவரை வந்து ஜில் கொடுக்க ஆரம்பித்துவிடும்! ஹே! ஹிந்து ஜனங்களே! பழைய காலத்தில் நம்பிக்கையுள்ளவர்களே! புராதனஞ் சிறந்ததென்று சொல்கிறவர்களே! புதிய முறையைத் தழுவுபவரைத் திட்டிக்கொண்டிருக்கிற புலிமக்களே! வெளியே வாருங்கள்! வேலை செய்யுங்கள்! கம்வாய் உடைத்துவிட்டது!

கரையைக் கட்டுங்கள்! எவனாவது வேலை செய்ய வந்தால் குறை சொல்லிப் புலம்பித் தவியாமல் வேலை செய்ய வாருங்கள்! பாயிற் பிணங்களைப்போலச் சாய்ந்து கிடவாதீர்கள்! இன்னும் ஈசிச்சேர் சாய்மானந்தான் உங்கட்கு சொர்க்கமாகத் தோன்றுகிறதோ? அப்படியிருந்தால் கம்வாய்த் தண்ணீர் வந்து வயல் வரப்பெல்லாம் புட்டெறிந்துவிடும். நெல் விளைகிற செய்யில் மண் விளைந்துவிடும். காலையும் கையையும் உதறிக்கொண்டு வெளியே வந்து வேலை செய்யுங்கள்! கரையின் உடைப்பை யடையுங்கள்! பெண்களுக்கு அடக்கமும் பணிவு மில்லாவிட்டால் இந்திய தருமம் போய்விடும். அவர்களிடத்தில் அறிவும் பொறுமையுமில்லாவிட்டால் ஜாதியே அழிந்து செத்துப்போகும். ஜாக்ரதை!



## அவசியமா? இல்லையா?

சிலர், "பெண்களுக்குப் படிப்பு உதவாது; படித்தால் கெட்டுப்போவார்கள்; உலக்கை மாதிரி யிருப்பது தான் சரி" யென்று சொல்கிறார்கள். அவர்களுக்கு, நடந்த ஒரு கதையைச் சொல்லுகிறேன். அதிலிருந்து படியாமையிலுள்ள சிரமத்தை யறிந்து கொள்ளட்டும்.

ஒருநாள் சாயங்காலம் ஐந்துமணி யிருக்கலாம். நான் கடைவீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். சுமார் முப்பது வயதுள்ள ஒரு பெண் வெகு வேகமாக வந்து, "இஞ்சே ஒங்களத்தானே! ஒரு கடலாசி எழுதித் தருவிய இன்னு கேக்க வந்தேன்" என்று சொன்னார்கள்.

நான் :—சாயுங்காலமாயிற்று. காலையி லெழுதக் கூடாதோ?

பெண் :—ரெண்டே ரெண்டு வரி. விடியக்காலம் எழவுக்குப் போகவேணும்.

(இருவரும் ஷெ யார் வீட்டுக்குப் போனோம்.)

நான் :—கடிதம் எழுதவேண்டியது யாருக்கு எந்த ஊருக்கு? என்ன தகவல்?

பெண் :—அவுகளுக்குத்தான். நொண்ணனுக்கும் பயனுக்கும்.

நான் :—அவர்கள் எந்த வூரிலிருக்கிறார்கள்?

பெண் :—லாக்காப்பிலிருக்கிறாக. பயனும் அங்க தான் இருக்கான்.

(பயனும் தகப்பனும் ஏன் லாக்காப்பி (Lockup) லிருக்கிறார்கள்? என திகைத்துப்போனேன். பிறகு

நிதானித்து அது ஒரு ஊராகத்தா னிருக்குமென் றெண்ணி)

நான்:—நீங்கள் சொல்லுகிற ஊர் எனக்குத் தெரிய வில்லையே? ரங்கூன் பக்கமா பினங்குப்பக்கமா?

பெண்:—சுப்பஞ்செட்டி வீட்டு முத்துராமன் போயிருக்கானே அந்தப் பக்கம்.

நான்:—அவர் யார்? அவர் எந்தப் பக்கமாகப் போனரென்றே யெனக்குத் தெரியாதே.

பெண்:—நன்னா மகமிண்டிக்கு அண்ணே ராமஞ் செட்டி யிருக்கானே அந்தப் பக்கந்தான்.

நான்:—சரி சரி; பினங்குப் பக்கத்தில் மலாக் காவோ?

பெண்:—ஆமா ஆமா அந்தவூர் தான்.

நான்:—நல்ல காரியமாயிற்று. அது லாக்காப் அல்ல. மலாக்கா வென்பார்கள். இருக்கட்டும், விலா சங் தெரியுமா?

பெண்:—தெரியாது.

நான்:—விலாசங் தெரியாமல் எப்படிக் கடுதாசி யெழுதுவது?

பெண்:—ஒங்களுக்குத் தெரியு மிண்ணுதானே கூப்பிட்டேன்.

நான்:—எனக்கெப்படித் தெரியும். ஊரே தெரிய வில்லையே விலாசமெப்படித் தெரியும்? வந்த கடதாசி ஏதாவதிருக்கிறதா?

பெண்:—ஆமா. இருக்கு. போனப்பிலே ஒரு கடலாசி வந்திச்சு.

என்று அடுக்குப் பெட்டியில் ஒரு பெட்டியைக் கொண்டு வந்து எனக்கு முன்னல் வைத்துத் திறந்தார்கள். அதிலிருந்து செவ்வண்டும் பாச்சையும் அந்துப் பூச்சியும் என் உடம்பு வேட்டி சட்டை எங்கும் ஓடித் தாவி மைத்துனன் முறை கொண்டாடி விளையாட ஆரம்பித்துவிட்டன. அப்பெட்டிக்குள் சில செல்லரித்த ஓலைகளிருந்தன. ஆனல், கடுதாசி கிடையாது. வேறு பெட்டி கொண்டு வந்தார்கள். அதிலும் இத்யாதி வஸ்துக்களே யிருந்தன. பிறகு விளக்கேற்றிக்கொண்டு வீடெல்லாம் பிரித்தார்கள். அகப்படவில்லை. அதன் பிறகு பிள்ளை குப்பைமேட்டில் விளையாடிக் கொண்டிருந்த இடத்தில் போட்ட வெறுங்கூடொன்றை யெடுத்து வந்து மாடத்தில் வைத்து அதன்மேல் விளக்கு வைத்த ஞாபகம் வரவே, ஓடி வந்து அதை யெடுத்துக் கொடுத்தார்கள். அந்தக் கூடு விளக்கெண்ணெயில் ஊறிப் போய் ஒன்றும் விளங்கவில்லை. மிகப் பிரயாசைப்பட்டு ஒருவாறுக மலாக்கா பெரி. சு. என்று ஒரு முகரிருப்பதைக் கண்டுபிடித்தேன். ஊரும் விலாசமும் கண்டுபிடிக்க இரவு மணி எட்டரையாகிவிட்டது. "நல்ல வேளை. காகிதம் மைக்கூடு பேனு கொண்டு வாருங்கள். எழுதி விடலாம்" என்றேன். "பேனுக் கடலாசி யெல்லாம் அவுக எங்கனையோ வச்சிட்டுப் போயித்தாக. மைக்கூடு மட்டுமிருக்கிறது" என்று சொல்லி காய்ந்துபோன ஒரு பீங்கான் மைக்கூட்டைக் கொண்டுவந்து என் முன்னலே வைத்தார்கள். (இந்தப் பெண்களை வைத்துக் கொண்டு, சங்கதியைக் கூடச் சொல்லப்படாதாம். தெய்வமே! அன்றையத்தினம் எனக்

கிருந்த ஆத்திரம் எனக்குத் தெரியும்.) இனி இவர்க ளோடு பேசிப் பிரயோசனமில்லையென்று கருதிப் பக் கத்து வீட்டிலுள்ள என் சிநேகிதனிடம் பேனாவும் காகி தமும் கூடும் வாங்கி வந்து "சங்கதியைச் சொல்லுங் கள்" என்றேன். சொன்னார்கள். எழுத ஆரம்பித் தேன். ஏழு பக்கமாயிற்று. இரண்டு வரி ஏழு பக்க மாயிற்று. விஷயங்களோ சொல்ல வேண்டியதில்லை. அத்தனையும் தனக்கும் மாமியாளுக்கும் நாத்தனாருக்கும் மறுமகளுக்குமுள்ள சண்டை. வேண்டிய சாமான்கள் மடக்கி மடக்கி எழுதி எனக்கும் புளித்துப்போய்விட் டது. கடிதமும் ஒருவாறாக ௧௦-மணிக்கு எழுதி முடிந் தது. மேல் உறையில் விலாசத்தைப் போட்டுவிட்டேன். பெயரெழுத வேண்டும். பெயர் எனக்குந் தெரியாது. அவர்களும் சொல்லமாட்டார்கள் என் செய்வது? எனக்கு ஜோஸ்யமுந் தெரியாது. வேறு யாரையும் கேட்க அந்த வீட்டில் வேறே ஆள்கிடையாது. சாதா ரணமாக "சாமியாடிச் செட்டியார்" என்று எல்லாரும் கூப்பிடுவது தெரியும். ஜாடையாகச் சொல்லுங்கள் என்றேன். குன்னக்குடிப் பேர் என்றார்கள். எனக் குத் தெரிந்தவரையில் நம்மவர்கள் வைத்தழைக்கிற எல் லாப் பெயர்களையும் சொல்லிக் கேட்டேன். அத்தனை யும் இல்லையென்று சொல்லிவிட்டார்கள். இன்னும் ஏதாவது ஜாடை காட்டுங்கள் என்றேன். அடுப்படியி லிருந்த ஒரு கரித்துணியைக் கொண்டுவந்து என் முன் னாலே வைத்து இரண்டு கையையுந் தூக்கிக் கும்பிட் டார்கள். இப்போது என்னுடைய மூளை வேலைசெய்ய ஆரம்பித்தது. கரித்துணிக்கு என்னென்ன பேருண்டு

என்று . தெரிந்து நமஸ்காரத்துக்கு அர்த்தங்கண்டு பொருத்தி ஒரு சுப்பிரமணியருடைய பெயராக்க வேண்டும். பெரிய வேலைதான். கடைசியாக "கந்தசாமி" யாக இருக்கலாமோ வென்றேன். "ஆமா ஆமா ; அது தான் அதுதான் என்றார்கள். விஷயம் முடிந்தது. இதை நமது நண்பர்கள் வரிவரியாகப் பல முறை படித்துப் பெண்கல்வி யவசியமா இல்லையாவென்று தீர் மானிக்க வேண்டும்.



## போர்டு மெம்பர்

முன்னொரு காலத்திலே ஒரு ஊரிலே ஒரு ராஜா இருந்தான். அவன் பரமலோபி. ஊரார் சொத்துக்குப் பேயாய்ப் பறந்தான். குடிகளிடத்தில் பிடுங்கி மூட்டை கட்டுவதில் மகாநிபுணன். அயோக்கியத்தனத்திற்கு மூத்த குமாரனாயிருந்தான். இவன் இட்ட சட்டங்களில் " ஒருபடி நெல் கொடுத்தால் அதற்குப் பிரதியாக இரண்டுபடி அரிசி கொடுக்க வேண்டு''மென்பதொன்று. இப்படிப்பட்ட அரசனை யார் மதிப்பார்? ஜனங்களெல்லாரும் வெறுப்புக்காட்டினர். இவன் ஒரு நாள் செத்துப்போனான். யமதர்மராஜா இவனைக்கூட விடவில்லை. ஜனங்களைத் துன்பப்படுத்தின இந்தராஜா பெரிய ராஜாவான தர்மராஜா முன்னிலையில் அடங்கிப் போனான். அநியாயம் செய்த ராஜா நரகலோகம் போனால் அவன் போகிறபோது மகனைக் கூப்பிட்டு, ' அப்பா! நான் இருக்கிறவரையில் எனக்கு நல்லபேர் கிடைக்கவில்லை. ஜனங்களெல்லாரும் என்னைத் திட்டினார்கள். அந்தக் கெட்ட பேரை நீக்கிவிட வேண்டும்" என்று காலைப்பிடித்துக் கேட்டுக் கொண்டான். அதற்கு மகனும் சம்மதித்தான். காரியம் முடிந்துபோய்விட்டது. ஜனங்களெல்லாரும் இளவரசனுக்குப்பட்டம் கட்டினார்கள். நடந்த சங்கதி மட்டும் தெரியாது. வந்துவிட்டான் புதிய மணியகாரன். சிம்மாசனத்திலேறினான். கொண்டாட்டம் முடிந்துவிட்டது. சட்டப் புஸ்தகத்தை எடுத்தான். முதலாவதாக ஒரு சட்டத்தைத் திருத்திவிட்டான். அதென்ன? " ஒரு படி நெல்லுக்கு இரண்டு

படி அரிசி தாவேண்டும்." என்பதை "ஒரு படி உமிக்கு இரண்டு படி அரிசி தாவேண்டும்" என்று. ஜனங்களெல்லாரும், "சரிசரி; இவனிப்படிப்பட்டவனா? இவனுக்கு அப்பன் பரமபோக்கியன்" என்று சொல்லவாரம்பித்தனர். இப்படியொரு பழைய கதையை நம் நாட்டுப் பாட்டிமார் சொல்வார்கள். இது எப்படியாவது போகட்டும்.

நமது தேசத்தை இப்போது ஆளும் பிரிட்டிஷார் சரியான சுதந்தரத்தை நமக்குத் தரவில்லையென்று போட்ட கூச்சலைக் கேட்டார்கள். யூனியன் முனிசிப்பாலிட்டி தாலுக்கா போர்டு ஜில்லாப்போர்டுகளை ஜனங்களிஷ்டம்போல் நடத்தலாமென்று விட்டு விட்டார்கள். கெஜட்டிலும் போட்டு வந்து விட்டது. இவைகளில் "அதிகாரிகள் தலையிடவே கூடாது. எல்லா ஜனங்களும் கூடிச் சில மனிதரை மெம்பராக்க வேண்டும். மெம்பராயினவர்களெல்லாரும் கூடி ஒருவரைத் தலைமையாக வைத்துக்கொள்ள வேண்டும். வரியை இஷ்டப்படி கூட்டலாம்; குறைக்கலாம்; எல்லாம் செய்யலாம்." இதுதானையா சட்டம். இந்தச் சங்கதி அநேகம் பேருக்கு விளங்கவில்லை. ஓட்போடுகிறவர்களுக்குத் தான் விளங்கவில்லையென்றால், மெம்பராகப்போகிறாரே-மூட்டை-அவருக்காவது விளங்குகிறதா? அதுவுமில்லை. சட்டையும் குட்டையும் அணிந்து கொண்டு போர்டுகளுக்குப் போகிறார்கள். போய்க் குறிச்சிகளில் இருந்து தூங்கி விழுகிறார்கள்; இல்லா விட்டால் அக்கிராசனாதிபதி சொல்வது சரி அல்லது அண்ணன் சொல்வது சரியென்று கையை முழநீளம் தூக்கி விடுகிறார்கள்.

உடனே வந்துவிடுகிறது ஆபத்து. ஏழைகள் வாயில் மண் விழுகிறது. பஞ்ச காலத்தில் ஏழைகள் படுகிறகஷ்டம் யாருக்குத் தெரியும்? அதிகாரப் பித்துப் பிடித்தலையும் மெம்பர்களுக்கு விளங்குமா? தற்கால நாகரிகக்காரர் வீடுகளில் கோட்ஸ்டாண்டு என்று ஒன்று இருக்கும். அதற்கும் சில மெம்பர்களுக்கும் வித்யாசமேயில்லை. ஒரு கான்பரன்ஸில் அடையாற்றுக் கூட்டம் வந்திருந்ததாம். அவர்களுள் ஒருவர் தலையைச் சொறியக் கையைத் தூக்கினாராம்; ஏதோ ஒரு விஷயத்திற்கு ஒட் கொடுக்கத் தான் கையைத் தூக்கினாரென்று நினைத்து, நூறுபேர் கையைத் தூக்கினார்களாம். இப்படி இருக்கிறது உலகம், இந்த சாமாசிகளுக்கு ஏன் எல்லோரும் ஒட்கொடுக்க வேண்டும்! கொடுத்ததற்குப் பலன் உடனே கிடைக்கிறது. புதிய மணியகாரன் சேதி போகப் போகத் தெரியும். பல்லைக் காட்டிப் பரக்க விழித்து ஒட் வாங்கித் திரியும் ஆசாமிகள் குறிச்சி கிடைத்தவுடன் என்ன நினைக்கிறார்கள்? சிற்றப்பன் மகனென்றும் மாமனென்றும் மைத்துனனென்றும் சிநேகிதனென்றும் ஒட் போட்டவர்களிடத்தில் வரி வாங்காமல் விடுகிறார்களா? வேறேதாவது சாதகம் செய்கிறார்களா? ஒட்டுப்போட்ட பிறகாவது புத்திவருமா? இந்த மெம்பர்களைக் கண்டபோது, "நீர் ஜனங்களுக்காக என்ன செய்தீர்?" என்று கேட்கவேண்டும். முடிவாக அவர்களை ஜனங்களின் வேலைக்காரரென்று நினைக்க வேண்டும். அடிமைச் சீட்டெழுதிக்கொடுத்த கௌரவ வேலைக்காரர்கள். இதுதான் உண்மை. இவர்களைச் சும்மாவிட்டால் தோளிலே ஏறிக்கொள்வார்கள். ஜாக்ரதை!

# ஓட்டு வேட்டை

ஓட்டு. இது ஒரு நல்லமாதிரி. முன் நம் நாட்டிலே இந்தச் சாக்குக்கு அவ்வளவு பிரியமில்லை. மெத்த சவுதம். ஏனென்று கேட்பார் கிடையாது. இப்பொழுது இந்தச்சரக்கு மிகக்கிராக்கி. இந்தச் சரக்கு எங்கே இருந்தாலும் ரொக்க விலை. சிபார்சுடன் சூடான வியாபாரம். போட்டிமேற் போட்டி. அதன் மேலே போட்டி எங்கே பார்த்தாலும் ஓட்டுப் பேச்சு. அடுப்படிக்கும் சிபார்சு போகிறது. ஆஹா! என்னே உலக நிலை!! ஒரு தாலுகா போர்டுக் குறிச்சியில் ஒருவர் போய் உட்காரப் பதினையிரம் ரூபாய் அவுட்டாகிறது. சட்டசபை வேட்டை வேறே இருக்கிறது. அதுவும் நெருங்கி வருகிறது. ஓட்டுப் போடுகிற நண்பர்களும் கவர்ன்மெண்டு சபைகளை அலங்கரிப்பவர்களின் உற்றுருறவினரும் இப்பொழுதே சட்டை தலைப்பாகை வேஷ்டிகளை யெல்லாம் சலவைக்குப் போட்டு வைத்தல் நல்லது. நம் முன்னோர்கள் கட்டிவைத்த பெரிய கோவில்களில் நடைபெறும் உத்ஸவத்தை விடப் பெரிய திருவிழா வல்லவா இது ஆனால் ஒன்று. காலம் மாறுகிறது. பணக்காரரைப் பணக்காரர் தேடுகிறகாலம் மாறிப்போய் விட்டது. ஏழைகளின் தயவைப் பணக்காரர் பெற முயற்சி செய்கிற காலம் வந்து விட்டது. ஓட் ஓட். எங்கே பார்த்தாலும் மோட்டார்கார்! ஏருத படியெல்லாம் ஏறுகிறார்கள். பேசாத ஆட்களோடு பேசுகிறார்கள். மோட்டார் காரில் ஏறியறியாதவர்க ளெல்லாரும் உபசாரத்தோடு ஏற்றியழைக்கப் படுகிறார்கள். எழைகள் - தகுதி யற்றவர்கள்-

தாம் போதாதென்று கருதப்பட்டவர்களைக் கூட அழைத்து வந்து விருந்து வைக்கிற காலம் வந்துவிட்டது. இப்பொழுது தான் கடவுள் ஏழைகள் பக்கம் திரும்பியிருக்கிறார் என்பது நன்றாக விளங்குகிறது. நிற்க, இப்படி யெல்லாம் - செய்யாத முயற்சி யெல்லாம் செய்து ஓட் பெறுகிற பிரபுக்கள், ஸ்தானம் கிடைத்து விட்டால், ஓட் கொடுத்தவர்களை எப்படி நினைக்கிறார்கள்? மனிதர்களாகவாவது நினைக்கிறார்களா? ஓட் வாங்க வரும்போதிருந்தமாதிரி பிறகு இருக்கிறார்களா? இங்கே தான் ரஹஸிய மிருக்கிறது. ஓட் கொடுப்பவர்களே! ஏமாந்துபோய் விடாதீர்கள்.



## யூனியன்

நமது நாட்டிலே வெகுகாலமாக ஜனங்கள் இருந்து வருகிறார்கள். வீதியிலே குப்பை கூளங்களும் நாற்றத் தண்ணீரும் நிறைந்திருந்தால் வியாதி வருமென்று தெரியும். ஆதலால், நமது முன்னோர்கள் சுத்தமாக வைத்துக் கொண்டார்கள். வியாதி வருவதில்லை. நூறுவருஷம் வரை சுகமாக வாழ்ந்தார்கள். இப்போது நாகரிகம் பழுத்துப்போய் விட்டது. ஊரைக்காப்பாற்ற யூனியனுபீசும், முனிசிப்பாலிட்டியும் வந்திறங்கிவிட்டன. யூனியனென்றால் என்ன? பெரிய கொம்பா? ஒன்றுமில்லை. ஊரிலே உள்ளவர்கள் ஒவ்வொரு வீட்டுக்கும் ஆள் வைத்து வீதியைக் கூட்டுவதைவிட பொதுவாக ஆள் வைத்து ஊர்முழுமையும் சுத்தப் படுத்துவது நலமல்லவா? அதற்காக ஒவ்வொரு வீட்டுக்காரரும் வரி கொடுத்து அந்தப்பணத்தைக் கொண்டு குப்பை கூட்டி விளக்குப் போட்டு வேண்டிய காரியங்களைச் செய்து கொண்டார்கள். இதற்கு மேஸ்திரி ஒருவரில்லாவிட்டால் சரியாக நடக்காதல்லவா? அதற்காக ஒருவரை சேர்மெனாக வைத்தார்கள். அவருக்கு யோசனை சொல்லச் சில மெம்பர்கள். இதுதான் யூனியன். இந்தக் கதை இப்போது மறந்துபோய் விட்டது. நல்ல மனிதன் யூனியனுக்கு சேர்மெனாக வந்தால் நலம். கூறுகெட்ட மனிதர்கள் சில சமயத்தில் வந்து விடுகிறார்கள். சேர்மன் ஊழியம் கிடைத்துவிட்டால் தலைகால் தெரிவதில்லை. உலகத்தில்லாத பதவி வந்து விட்டதாக எண்ணம். சில கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களுடைய திருவடி

களைச் சுவைத்துக்கொண்டு புத்தி மருண்டு விடுகிறார்கள். ஊர்த்தாலியை அறுத்து யூனியனில் சேர்த்து விட்டால் மோட்ச உலகக்கதவு திறந்துவிட்டதாக உத்தேசம். அசந்து மறந்து யாராவது ஆளில்லாத விதவைகளுடைய இடங்கள் கவனிக்காமல் கிடந்தால் யூனியன் சிறுவாட்டில் சேர்ந்து விடும். ஏழைகளின் வயிறு எரிவதுபோல சில சேர்மன் வீடுகட்கு முன்னால் விளக்குகள் நன்றாக எரியும். வீதியும் சுத்தமாக இருக்கும். ஜனங்களுடைய வரிப்பணத்திலிருந்து தான் யூனியன் நடைபெறுகிறதென்ற எண்ணமே இவர்களுக்குக் கிடையாது. தங்களுடைய உத்தியோகம் எப்படிப் பட்டதென்பது அநேகருக்கு விளங்குவது கிடையாது. சில சேர்மன் வீட்டில் யூனியன் வேலையாட்கள் வேலைபார்ப்பதை நான் அறிவேன். சில இடங்களில் சேர்மனுக்குத் தம்பி தமயன் சமுசாரங்கூட வேலை யேவுவதை நான் பார்த்ததுண்டு. காலங்கெட்டுப் போய்விட்டது. ஊரார் சொத்துக்குப் பேயாய்ப் பறந்து எடுத்ததெல்லாம் "எங்கரோச்மெண்டு" என்று பிடுங்கி யூனியனில் கொடுத்துக் கும்பிட்டு விழுகிற சாமாசிகளை ஜனங்கள் லேசில் விடக்கூடாது. ஒழுங்காக வேலைபார்ப்பவரை சேர்மனாக வைக்கவேண்டும். அவர் ஒழுங்காக நடக்கிறாரவென்று பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் அவரை வெளியேற்ற வழி தேடவேண்டும். இல்லாவிட்டால் கட்டுச் சாதத்தில் வெருகை வைத்துக் கட்டிய மாதிரி யாகிவிடும். வரி போட வேண்டுமானால் ஜனங்களின் சம்மதம் தெரிந்து போடவேண்டும். வந்த காசில் ஒரு பைசாகூட வீணாகப் போகாமல் கோவில் சொத்தாகப் பாவித்துச் செல

விட வேண்டும். கையில்கிடைத்த காசைத் தகப்பனுர் வீட்டுச் சொத்தாக நினைத்தால் அந்த சேர்மனுக்குச் சீட்டுக் கொடுக்க வழிபார்க்கவேண்டும். எந்தக்காரியத்திலும் பணங்கொடுப்பவர்கள் எஜமானர்கள். சம்பளம் வாங்குபவர்கள் வேலைக்காரர்கள். இரண்டுமில்லாமல் வேலை பார்ப்பவர்கள் ஊழியர்கள். யூனியன் சேர்மன் ஒரு ஊழியக்காரர். ஜனங்கள் யஜமானர்கள். யாருக்கு யார் பயப்படுவது? சேர்மன் விடுகிற உருட்டாவுக்கு ஜனங்கள் பயப்படக்கூடாது. வீட்டுக்கு முன்னுல் குப்பையாவது தண்ணீராவது இருந்தால் அப்புறத்தில் போகும்படி செய்ய வேண்டுவது அவருடைய கடமை. இந்த மேஸ்திரி உத்யோகத்தை வைத்துக்கொண்டு தலைகுப்புற ஆடுகிருர்கள். தாங்கள் தான் கலெக்டரென்று நினைப்பு. எழுதிய கடிதத்திற்குப் பதிலெழுதத் தெரியாது. யூனியன்சட்டம் இன்னதென்றே அனேகம் சேர்மனுக்கு விளங்காது. ஹைகோர்ட்டுக்கு மூன்று நாளைக்கு ரஜாவில் சென்ருல் தெரியும் வேடிக்கை! இந்த உத்யோகம் கிடைத்துவிட்டால் ஊருக்குத் தான்தான் தலைமைக்காரனென்று குருட்டுவிழி விழித்துக்கொண்டு கூத்தாடுகிருர்கள். யூனியனுபீசில் குறிச்சிபோட்டு இவர்களை உட்காரவைத்தது எதற்கு? வரிபோடத்தான் என்பது இவர்கள் நினைப்பு. போட்டவரி தப்பாயிருந்தால் ஆக்ஷேபிக்க ஜனங்கட்கு அதிகாரமுண்டு. வரி கொடுக்கா விட்டால் சேர்மன் செய்வதென்ன? உஷாராக நடவடிக்கை நடத்துவதுதான் நலம்.

---